கசடதபற
ஏப்ரல் 1973 35 காசு 31

## புயலில் ஒரு தோணி*

அனுபவத்தின் வெளிப்பாடு இலக்கியமாக உருப்பெறுகிறது. அனுபவம் என்பது உணர்வின் சலனங்களை உள்ளடக்கிப் புலன்களினால் மட்டும் உணரப்படுவது அல்ல; அறிவினாலும் தெரியப்படுகிற அனுபவங்களே ஆழ்ந்த தன்மை கொண்டவை.

அப்படிப்பட்ட அனுபவங்களை உள்ளடக்கிய—வாழ்வு பற்றியும், மரணம் பற்றியும், கடவுள் பற்றியும் இன்னும் இப்படிப்பட்ட அடிப்படையான விஷயங்களைப் பிரச்னையாக்குகிற இலக்கியமே பேரிலக்கியமாக, பெயர் சொல்லத்தக்க இலக்கியமாக இடம் பெறுகிறது.

மனிதனின் வாழ்வு, எதிர்காலம் பற்றிய நோக்கங்களை பிரச்னைக்குருவாக்குகிற அடிப்படையான அனுபவங்களில் யுத்தமும் ஒன்றாகும். யுத்தம் மனித நம்பிக்கையைச் சின்னாபின்னமாக்குகிறது; வாழ்வின் சீரான கதியை நிலைகுலையச் செய்கிறது; மனித உறவுகளைத் தகர்க்கிறது; கசப்புணர்ச்சியை வளர்க்கிறது. இப்படி யுத்தத்தின் கொடூரத் தன்மைகளை எடுத்துச்சொல்கிற இலக்கியம் இருபதாம்நூற்றாண்டில்தான் தொடங்கியது. அது வரை யுத்தத்தை இலக்கியமாக்கிய வீரர்களும், சிருஷ்டிகர்த்தாக்களும் வெற்றிபெற்ற தேசத்தின், நபரின், மதத்தின் பிரதிநிதிகளாகவே தங்களை உருவகப்படுத்திக் கொண்டனர். முதல் உலகயுத்தமும், இரண்டாம் உலகயுத்தமும்தான் தனிமனித சக்திகளைப் பற்றிய லட்சியமற்ற மிகப் பிரம்மாண்டமான அளவில் நடைபெற்று வாழ்வின் ஆதாரங்களை நிலைகுலைய வைத்தன.

இந்த யுத்தத்தின் நிலைக்களன் எங்கேயோ ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் நின்றுவிடவில்லை. இங்கே ஆசியாவிலும் பெரும் விளைவுகளை ஏற்படுத்தியுள்ளது.

'புயலில் ஒரு தோணி' கதை இரண்டாவது உலகப்போர்க்காலத்தை ஒட்டி மலேயா-இந்தோனேசியா பிரதேசத்தில் நிகழ்வதாக உள்ள கற்பனைப் படைப்பு. ஆசிரியர் ப. சிங்காரம் முன்னமேயே 'கடலுக்கு அப்பால்' என்கிற நாவலை எழுதியுள்ளார்.

அது ஓரளவு சம்பிரதாயமான கதை; அதிகமான சிக்கல் இல்லாமல், நிறைவேறாத காதலைச் சொல்கிறது. சூழ்நிலை மாறுதலினாலும், கதாபாத்திரங்களின் உயிரோட்டத்தினாலுமே நாவல் விசேஷ கவனம் பெறுகிறது.

மொய்க்கும் ஈக்களாய்
சுற்றி நின்றார்கள்.

கூட்டத்தின் உள்ளே
ஒரு பிணம்.

தள்ளிக்கிடந்த சைக்கிளில்
சாவின் முறுக்கம்.

செருப்பில் ஈஷிக் கொண்டன
சிதறிய குருதித் துளிகள்.

ஓரிரு மனிதர் இன்னும்
இறங்காத பஸ் ஒன்று
வீதியோரத்தில்
புலம்பிக் கொண்டிருக்க.........

பதி

'புயலில் ஒரு தோணி'யோ அதே சூழ் நிலையைப் பின்புலமாகக் கொண்டிருப்பினும் முந்தைய நாவலைவிட விஸ்தாரமானது; மேம் பட்டது.

சமூகக் குறிப்பேடு (social document) என்கிற முறையில் இந்த நாவலுக்கு ஒரு சிறப்பிடம் உண்டு. தமிழகத்தின் தெற்குப் பகுதியிலிருந்து வட்டிக்கு விட்டுப் பணம் சம் பாதிக்க மலேயாவுக்கும், இன்னும் இதர கிழக் காசிய நாடுகளுக்கும் கப்பலேறிய செட்டிமார் களைப் பற்றியும், இந்திய தேசீய ராணுவம் பற்றியும் நிறையத் தகவல்கள் அடங்கியது இந்த நாவல். உயர்ந்த கலைத்தன்மை தோன்ற எழுதப்பட்டிருக்கும் நாவலின் குறிப் பான சிலபகுதிகளோ நாவலின் அந்தஸ்தை இன்னும் உயர்த்துகின்றன. எட்டு, பத்து, பதினொன்று, பன்னிரண்டு, முப்பது, முப்பத் திரண்டு, முப்பத்தாறு அத்தியாயங்கள் குறிப் பிடப்பட வேண்டியவை. இப்படிச் சில பகுதி கள் விசேஷ அக்கறையுடன் எழுதப்பட்டிருக் கின்றன என்றால் மற்ற பகுதிகள் எவ்வாறு அவற்றுடன் பொருந்துகின்றன என்ற கேள்வி எழக்கூடும். இதற்கு சங்கீதத்திலி ருந்து உதாரணம் கொடுக்க இயலும் என்று நம்புகிறேன். சமீபத்தில் பர்வீன் சுல்தானா வின் நான்கு மணி நேரக் கச்சேரி கேட்டேன். நம்மை மெய்மறக்கச் செய்கிற genuine musical moments சில விநாடிகளே. மற்ற நேரங் கள் அந்த விநாடிகளை எதிர்பார்த்து நம்மைத் தயாராக்குபவை; அல்லது அவற்றிலிருந்து இறங்குமுகமாக அமைந்தவை. மனோதத்து வத்திலும் இப்படி peak experience என்கிற தருணங்கள் விஞ்ஞான உண்மையாக ஏற்றுக் கொள்ளப்படுகின்றன. அந்த நேரங்களில் நாம் செய்வது எதுவாக இருந்தாலும் முழு மடங்கு அர்த்தமுணர்ந்து செய்கிறோம்.

நாவலின் எந்தப் பக்கத்தைத் திறந்தாலும் இப்படிப்பட்ட தருணங்களை நமக்கு உண்டாக் கித்தரக்கூடிய மேதைகள் இருந்திருக்கிறார் கள். ஆயினும் சில பகுதிகளிலேனும் அவர் களின் தரத்தை இவர் எட்டுவது நாம் வியந்து பாராட்ட வேண்டிய அம்சமே.

நாவலில் இன்னுமொரு சிறப்பு அதன் மொழி நயம். ஆசிரியருக்கு irony இயல்பாக வந்திருக்கிறது, வெவ்வேறு வகைப்பட்ட நடை (style)களில் நாவலைக் கொண்டு போயிருக்கிறார். இவற்றின் மூலங்களைக் (literary sources) கண்டு பிடிப்பது பேராசிரி யர்களுக்குப் பயனுள்ள ஆராய்ச்சியாக அமையும்.

ஒரு உதாரணம்.

"மானிடனே, நண்பனே! நீ எதை விட்டு எதைப்பற்றினாய். ஏனெதற்கு?—மானிடனே, தோழனே, நான் சாதி சமயத்தைவிட்டு சங் கத்தையும் கட்சியையும் பற்றினேன். புரா ணங்களை எரித்து விட்டுப் பத்திரிகைகளைப் படிக்கிறேன். மர்மக் கற்பனை தெய்வ விக்கிர கங்களை வெறுத்து, வெட்ட வெளிச்சமானிடப் பொம்மைகளைத் தொழுகிறேன். காவி உடைச் சன்னியாசிகளைப் பழித்து வேறு உடைச் செய லாளர்களைத் துதிக்கிறேன். காணிக்கை செலுத்த மறுத்துச் சந்தா கட்டுகிறேன். தேர்த்திருவிழாக்களுக்குச் செல்வதைநிறுத்தி, மாநாடுகளுக்கும், சிறப்புச் சொற்பொழிவு களுக்கும் போகிறேன். நெற்றியில் திருநீறு பூசுவதை விடுத்துச் சட்டையில் சின்னம் அணிகிறேன். மோட்ச லோகப் புரட்டை விண்டெறிந்த என்மனம் துன்பமில்லா இன்ப புரியை நாடி நிற்கிறது. நான் மூடநம்பிக்கை மடமையிலிருந்து விடுபட்ட அறிவியக்கப் பகுத்தறிவாளன்; விஞ்ஞானதாசன். அறிவே துணை. விஞ்ஞானமே கதி."

நாவல் சம்பவங்களில் விலாசினி சம்பந் தப்பட்ட யாமசாக்கி விவகாரம், கடித மீட்பு மட்டும் espionage film, பார்ப்பது போன்ற பிரமையை ஏற்படுத்துகிறது. நாவல் யுத்தம் சம்பந்தப்பட்ட காரணத்தால் பெண்கள் கதையில் வெகு குறைவான இடமே பெறுகின் றனர். அவர்களில் விலாசினி ஒரு துருவம் என்றால் அயிஷா மற்றொரு துருவம். மற்றபடி வேசைகள் நிறையவே வருகின்றனர். 'பெண்ணாகி வந்த மாயப் பிசாசங்கள்'.

நாவலுக்குக் காவியத்தன்மை உண்டாக் கவோ என்னவோ இறுதியில் பாண்டியன் உயிர் துறக்கிறான். ஆயின் யுத்தம் சமுதா யமும் இடம் பெற்றிருக்கிற அளவில் நாவல் தனிச்சிறப்பானது.

ஆர். சுவாமிநாதன்

---

*புயலில் ஒரு தோணி (நாவல்)
ப. சிங்காரம்
வெளியீடு: கலைஞன் பதிப்பகம்
சென்னை 17
விலை ரூ. 10/-

# கான்ஸர் வார்டு

## —சோவியத் யூனியனின் நிலைக்கண்ணாடி

எஸ். வி. ராஜதுரை

"கசடதபற" 2-வது இதழில் (நவம்பர் 70) ஞானக்கூத்தன் எழுதிய 'நோபல் பரிசும் மார்க்சிசப் பரிசும்" என்ற தலைப்பில் சோல்ஸனிட்ஸின் பற்றி எழுதிய கட்டுரையைத் தற்செயலாக மீண்டும் படிக்க நேரிட்டது. அதனைத் தொடர்ந்து 'தாமரை' பிப்ரவரி 73 இதழில் எஸ். அம்பலவாணன் எழுதியுள்ள —'வறுமையில் வாடும் ஸல்ஸனித்சின்' —என்ற கட்டுரையையும் படிக்க நேர்ந்தது. கசடதபறவில் நான் எழுதிய 'சோல்ஸனிட்ஸின் —ஒரு பரிசீலனை' என்ற கட்டுரையை நானே மறு பரிசீலனை செய்தேன். இவற்றின் விளைவாக இக் கட்டுரை.

'கான்ஸர் வார்டு' சோல்ஸனிட்ஸினின் புகழ் பெற்ற நாவல். 'கான்ஸர் வார்டு' என்பதே சோவியத் யூனியனைக் குறிக்கும் ஒரு குறியீடு என்று மேனாட்டு விமர்சகர்கள் கூறுகின்றனர். இப்படிக் கூறுவதில் அவர்களுக்கு சொந்த நோக்கங்களுண்டு. இந்நூல் சோவியத் யூனியனில்தான் பிரசுரிக்க வேண்டும் என்றும், வெளிநாடுகளில் பிரசுரிக்கப்பட நேர்ந்தால் அது திரிபுகளுக்கு ஆளாகிவிடும் என்றும் சோவியத் யூனியன் எழுத்தாளர் ஒன்றியத்தில் வாதாடிய சோல்ஸனிட்ஸின், முதன் முதலாக மேற்கு ஜெர்மனியில் பிரசுரிக்கப்பட்டபோது, அச்செயலைக் கண்டித்துப் பகிரங்கமான அறிக்கையும் விடுத்திருக்கிறார். எனவே நமக்குக் கிடைத்துள்ள 'கான்ஸர் வார்டி'ல் அசல் சோல்சனிட்ஸின் எங்கே, போலி எங்கே என்று பிரித்துப் பார்ப்பது சிரமமான காரியம் என்றாலும் அந்நாவல் மறுக்க முடியாத பல வரலாற்று உண்மைகளைச் சொல்கிறது என்பது ஓர் முக்கியமான விஷயமாகும். இன்று நமக்குக் கிடைத்துள்ள வடிவத்திலே கூட. ஒரு விமர்சனத்துடன் இந் நாவல் ஏன் ரஷ்யாவிலேயே பிரசுரிக்கப்படவில்லை என்பது நமக்குப் புரியவில்லை.

கான்ஸர் வார்டு ஒன்றில் சிகிச்சைக்கு வரும் புற்று நோயாளிகளின் உரையாடல்கள், நினைவுகள், அனுபவங்களின் வழியாக ஸ்டாலின் காலத்து, ஸ்டாலினுக்குப் பிற்பட்ட காலத்து (குருஷ்சேவுக்கு கிரெம்ளின் அரியணை தயாராகிவரும் காலம்) சோவியத் யூனியனைப் பற்றிய ஒரு கான்வாஸை சோல்ஸனிட்ஸின் தீட்டுகிறார். அவரது ஓவியம் இருண்ட வண்ணங்களாலானது. மேற்கூறிய மிக அண்மைக்காலத்து சோவியத்யூனியனின் குறுக்கு வெட்டுத் தோற்றம் ஒன்றைத் தருவதற்காக அவர் 'கான்ஸர் வார்டு' எழுதியிருக்கிறார்.

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி, அதன் தலைவர்கள், முக்கிய ஊழியர்கள், தொழிற்சாலை மானேஜர்கள், தொழிலாளர்கள், மாணவர்கள், சோவியத் மாதர், சோவியத் ராணுவம், சோவியத் விஞ்ஞானம், ஸ்டாலின் வியாக்கியானப் படுத்திய மார்க்சியம், பேராசிரியர்கள், விஞ்ஞானிகள், சிறுபான்மை இனத்தவர் முதலிய ஏராளமான அம்சங்கள் விமர்சனத்துக்கு வருகின்றன.

கான்ஸர் வார்டுக்கு பவேல் நிக்கோலயேவிச் ரஸனோவ் நோயாளியாக வந்து சேர்வதை நாவல் துவக்கமாகக் கொள்கிறது. இவனை ஞானக்கூத்தன் தனது கட்டுரையில் 'உன்னதமான கம்யூனிச சித்தாந்தத்தை மயக்கமும் திரிபும் இல்லாமல் தெளிவாகத் தெரிந்து கொண்ட ரஸனோவ்" என்று கேலியாகக் குறிப்பிடுகிறார். மார்க்சீய சிந்தாந்தத்தைக் கேலிச் சித்திரமாக மாற்றிய. அதைக் கொச்சையாகப் புரிந்து கொண்டு அற்பத்தனமாக நடைமுறைப் படுத்திய ஒரு பிலிஸ்டைன்தான் ரஸனோவ். ஸ்டாலினிசத்தின் எதிர்மறை விளைவுகளின் கதிர்வீச்சுத் துகள். அவன் மக்களிடமிருந்து விலகிநின்ற அதிகார வர்க்கத்தின் செல்லப்பிள்ளை. சாதாரணத் தொழிலாளியாக இருந்து, சகத்தொழிலாளரை ரகசியப் போலீசுக்குக் கட்சியின் எதிரிகள் என்று காட்டிக் கொடுத்ததன் மூலம் படிப்படியாக உயர்ந்து தொழில் வாரியத்தில் ஒரு உறுப்பினராக மாறியவன் இவன். ஸ்டாலினிசத்தின் தவிர்க்க இயலாத விளைவு.

இவனது சோசலிச விரோத ஒட்டுண்ணி வாழ்வுக்கும் மார்க்சுக்கும், கார்க்கிக்கும் யாதொரு உறவுமில்லை. தனது அதிகாரத்தைப் பயன்படுத்தி தனக்கு நல்ல குடியிருப்பும், காரும், வசதியும் தன் மக்களுக்கு நல்ல கல்வியும் வேலை வாய்ப்புக்களும் பெற்றுக் கொண்டவன். சோசலிச இலக்கியம் பற்றிப் பேசிவிட்டு அலெக்ஸாண்டர் டூமாஸை நாடுபவன். இவன் சோவியத் யூனியனில் தோன்றியுள்ள சிகப்பு பூர்ஷ்வா வர்க்கத்தின் வகைமாதிரியான (type) பாத்திரம். லெனினைக் குறிக்கும்போது "Man with a Capital M" என்ருர் கார்க்கி. நோயைக் குணப்படுத்துவதில் நம்பிக்கை இழக்கக் கூடாது என்றும், 'I must feel a Man with a Capital M' என்றும் கருதிக் கொள்கிற இவனுக்கும் கார்க்கிக்கும், லெனினுக்கும் எவ்வித உறவும் இல்லை. "உங்களுடைய குழந்தைகள் உங்களிலும் விட எவ்விதத்திலும் மேலானவர்களாக இல்லையென்ருல், நீங்கள் அவர்களைப் பெற்று வளர்த்தது வீண். உண்மையில் உங்கள் வாழ்வே வீண்" என்று கார்க்கி கூறியதைத் தனது சுயநலத் திட்டங்களைக் கொண்டு தன் குழந்தைகளுக்கு வசதியான வாழ்வைக் கொடுத்துவிட்ட ரஸனேவும் சொல்லிக் கொள்கிருன். உயர்ந்த ஆன்மீக குணங்களைக் கொண்டவர்களாக இளந்தலைமுறையினரை உருவாக்க வேண்டும் என்ற கார்க்கியின் கூற்று ரஸனேவால் இப்படிக் கொச்சைப்படுத்தப் படுகிறது. "வாழ்நிலை எண்ணத்தை நிர்ணயிக்கிறது" (social being determines social consciousness) என்பது மார்க்சீய அடிப்படைக் கருத்து. பொருள் முதலா அல்லது கருத்து (எண்ணம்) முதலா என்ற தத்துவார்த்தச் சர்ச்சையில் பொருளின் முதன்மையை (primacy of matter) நிறுவிய மார்க்ஸ், ஒருவனது சமுதாய வாழ்நிலை அவனது எண்ணத்தை நிர்ணயிக்கிறது என்று கூறினர். இது யாந்திரீகமாகச் செயல்படுவதில்லை. இப்படிச் செயல்பட்டால் எல்லா உழைக்கும் மக்களுக்கும் கம்யூனிச எண்ணம் தானுகவே வந்து விடும். இது உண்மை என்ருல் மார்க்ஸ் 'மூலதனம்' எழுதியிருக்கவே வேண்டாம். மார்க்சியக் கோட்பாட்டை இயந்திரவியல் முறையில் புரிந்துகொண்டு கடைப்பிடிக்கும் ரஸனேவ் கூறுகிருன்:— "ஒரு சரியான எண்ணத்தை உருவாக்க ஒரு மனிதனுக்கு நல்ல மகிழ்ச்சியான வாழ்வு இருக்க வேண்டும். ஆரோக்கியமான மனதிற்கு ஆரோக்கியமான உடல் என்று கார்க்கி சொன்னர்". மார்க்சையும் கார்க்கியையும் கொச்சைப்படுத்தும் இவனுக்கும் மார்க்சீயத்துக்கும் ஸ்நானப்பிராப்தி கூட இல்லை. மாருக "வாழ்நிலை எண்ணத்தை நிர்ணயிக்கிறது" என்ற மார்க்சின் கூற்று புதிய அதிகார வாழ்நிலையின் காரணமாக உழைக்கும் மக்களை நாகரிகமற்றவர்களாகக் கருதும் இவனது எண்ணங்களின் வாயிலாக வெளிப்படுகிறது.

சோவியத் அதிகார வர்க்கத்தின் ரஸனேவ்கள் எப்படி மக்களை விட்டு வெகு தூரத்தில் தந்தக் கோபுரத்தில் வாழ்கிருர்கள் என்பதை சோல்ஸனிட்ஸின் காட்டுகிருர். ஷெண்டியாபின் என்ற கட்சி ஊழியரின் மகள் ஒரு கூட்டுப்பண்ணை உழத்தியின் மகனைக் காதலிக்கப்போய், திருமணம் செய்து கொள்ளும் அளவுக்குத் துணிந்து விட்ட "முட்டாள்தனம்" தம் மக்களுக்கு வந்து விடக் கூடாது என்று ரஸனேவ் அஞ்சுகிருன். காதலனை 'அரசியல் ரீதியாக' மட்டந்தட்டி நிராகரித்துத் தம் மகளைக் கடைசியில் காப்பாற்றிவிட்ட ஷெண்டியாபின் தம்பதிகளைப் பாராட்டுகிருன். படிப்படியாக 'முன்னேறி' வரும் ரஸனேவுக்கு மனிதர்களின் கூட்டமும் நெருக்கித் தள்ளும் கும்பலும் வெறுப்பூட்டுகின்றன. பஸ்கள், டாக்சிகள், டிராலி வண்டிகள், நெருக்கியடித்துத் தள்ளும் மக்கள், ஒருவரையொருவர் இடித்துக் கொள்வதும், திட்டிக் கொள்வதும்—'சே! கொத்தனுர்களும், அழுக்கு மேலாடையணிந்த இதர தொழிலாளிகளும் பஸ்களில் ஏறிவிட்டால் உனது கோட்டு முழுவதும் எண்ணெயும் சுண்ணும்புந்தான்'. சோவியத் அதிகார வர்க்கத்தில் ரஸனேவ் ஒருவன் மட்டுமா? இவன் உண்மையில் ஒரு கம்யூனிஸ்ட்தானு?

உள்ளூர் அறிவு ஜீவிகளுக்கு உபதேசம் செய்துவிட்டு கிராமத்துப் பெண்களுக்குப் பொருட்களை இரட்டிப்பு விலைக்கு விற்கும் ஸ்தல நலத்துறை அலுவலர், தனது சொந்த உபயோகத்துக்கு மருத்துவமனையின் ஆம்புலன்ஸ் வண்டியை அடிக்கடி எடுத்துக்கொள்ளும் கட்சிச் செயலாளர், ரேஷனில் கொடுக்கப்பட வேண்டிய சாதனங்களை முன்கூட்டியே கட்சித் தலைவர்களுக்குக் கொடுத்துவிட்டு "விற்பனை முடிந்தது" பலகை மாட்டும் சில்லறை வியாபாரி, டாக்டர்கள் தனியாகத் தொழில் செய்யக் கூடாது என்ற வசதியை, வி. ஐ. பி. களுக்குச் சிகிச்சை செய்துமாற்றிக் கொள்ளும் மருத்துவர், இன்னும் எத்தனையோ பேர் இந் நாவலில் வருகிருர்கள். ஸ்டாலினின் ரஷ்யாவில்தான் அவர்கள் வாழ்கிருர்கள்.

ஸ்டாலினின் மரணத்துக்குப்பின் 'பனிக்கட்டி உருகிய' காலத்தையும் 'கான்ஸர் வார்டு' விவரிக்கிறது. அப்போது பல சிறைக்கைதிகள்—அரசியல் காரணங்களுக்காக அநியாயமாகக் கைது செய்யப்பட்டவர்கள் — பலர் விடுவிக்கப்படுகிருர்கள். ஆனல் அவர்களுக்கு அநியாயமான தண்டனை வாங்கித் தந்தவர்களுக்கு ஏதும் நடப்பதில்லை. சுயநலக் காரணங்களுக்காகத் தன் சகத் தொழிலாளர் சிலரைச் சிறைக்குத்தள்ளிய ரஸனேவ், சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியில் ஏற்பட்ட திடீர் மாறுதல்களாலும், அரசியல் கைதிகள் விடு

விக்கப்படும் நிகழ்ச்சிகளாலும் அஞ்சிநடுங்கு கிருன். தன்ஞல் துயரத்துக்காளான தொழிலாளியொருவன் தன்னைப் பழிவாங்கக் கூடும் என்று நடுக்கம் கொள்கிருன். ஆஞல் அத்தகைய அச்சம் தேவையில்லை என்பதை அவன் மகள் ஆலியெட் உறுதிப் படுத்துகிருள். ஸ்டாலின் காலத்திலிருந்தே தனது நடவடிக்கைகளை மக்களுக்கே தெரியாமல் இரகசியமாக வைத்திருந்த சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் தன்மை, ஸ்டாலின் மரணத்துக்குப் பிறகு எள்ளளவும் மாறவில்லை. சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் ஏற்படும் மாறுதல்களும், தனிநபர் வழிபாடு என்ற பிரச்சினையும், கடந்தகாலத் தவறுகள் பற்றிய விவாதங்களும் இன்றுவரை வெளிச்சம் காணுத ஒன்ருகும். மக்களிடமிருந்து கட்சிக்கு, கட்சியிடமிருந்து மக்களுக்கு (From the masses to the Party, to the masses from the Party) என்பது சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி கடைப்பிடிக்காத ஒன்ருகும். அங்கு ஒருவழிப்பாதை மட்டுமே அமுலிலிருந்து வந்துள்ளது. கட்சித் தலைமையின் ஆணைகள் —அவை கத்தி முனையிலேயே நடைமுறைப் படுத்தப்பட வேண்டும். மாதாகோயில் படத்தைப் பாடப்புத்தகமொன்றில் பார்த்தவுடனேயே கிழித்தெறியும் பள்ளியாசிரியர், டாக்டர்களும் நர்ஸ்களும் குறைவாக உள்ள கான்ஸர் வார்டின் நர்ஸ் ஒருத்தியைத் தொழிற்சங்க மாநாட்டுப் பிரதிநிதிகளைக் கவனித்துக்கொள்ள 15 நாட்களுக்குக் கூப்பிடும் கட்சிக் காரியதரிசி, கன்னிநிலங்களில் குடியேறிய அப்பாவித் தம்பதியரின் நாயொன்றைக் குறிவைத்துச் சுடும் போலீஸ்காரர்கள், விலங்குக் காட்சிச் சாலையில் குரங்கொன்றின் கண்ணில் புகையிலையைத் தூவிய யாரோ ஒருவன் முதலானேர் கட்சி கடைப்பிடித்த கெடிபிடித்தனமான முரட்டு நடைமுறையின் விளைவுகளும் வீச்சுக்களுமாவர்.

ஸ்டாலின் காலத்தில் மார்க்சியம் ஒரு வறட்டுச் சூத்திரமாக (dogmatism) மாறி வந்ததையும், புதிய கண்டுபிடிப்புகள், மாற்றுக் கருத்துகள் ஆகியவற்றை ஆழமாக ஆழ்ந்துணர்வதற்குப் பதிலாக அவற்றைச் சகட்டு மேனிக்கு நிராகரிக்கும் பிலிஸ்டைன் நிலைபாடு சோவியத் சித்தாந்த வாதிகளிடம் இருந்து வந்ததையும் இந்நாவல் எடுத்துக் காட்டுகிறது.

பொருளாதார அடிப்படையை (economic base) மாற்றியமைக்கும்போது ஒரு சமுதாயத்தின் மேல் கட்டுமானம் (superstructure) அடியோடு மாறுகிறது என்ற யாந்திரிகமான கருத்தைக் கொண்டிருந்தவர் ஸ்டாலின். சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் மேல் கட்டுமானமும் முதன்மை பெறுவது மார்க்சியத்துக்கு ஏற்புடையது. ஏங்கல்ஸ் ஓரளவும், மாவோ மிகத் தெளிவாகவும் கூறியுள்ளனர். முற்ருன பொருளாதார அடிப்படைமாற்றம் என்பது சரியான தத்துவார்த்தக் கண்ணேட்டம் இல்லாத சூழலில் நடைபெறவே முடியாது. ஆகவே பொருளியல் மாறுதலும் சிந்தனை மாறுதலும் எல்லாச் சமயங்களிலும் கைகோர்த்தே சென்ருக வேண்டும். இந்தப் புரிந்து கொள்ளல் ஸ்டாலினிடம் இல்லை. மக்களின் உள்ளங்களை வென்றெடுப்பதற்கும், சிந்தனைத் துறையில் எஞ்சிநின்ற நச்சுக் கருத்துக்களைப் போக்குவதற்கும், புதிய சித்தாந்தத்தை நிலைநிறுத்துவதற்கும், கட்சியை இடைவிடாது பரந்துபட்ட உழைக்கும் மக்களின் விமர்சனத்துக்குட்படுத்துவதற்குமான ஒரு கலாச்சார புரட்சியைப் பற்றிச் சிந்திக்கவேயில்லை. சோசலிசப் பொருளாதார அடிப்படையை ஏற்படுத்தி விட்டதாக நினைத்தபோது, அந்நாட்டில் முரண்பாடுகள் மறைந்துவிட்டன என்று 18 ஆவது கட்சிக் காங்கிரஸ்வரை அவர் அபிப்பிராயம் கொண்டிருந்தார். லெனினின் 'அரசும் புரட்சியும்' என்ற நூலில் வெகுவாகப் பாராட்டிய பல சமுதாய அரசியல், பொருளியல் அம்சங்கள் ஸ்டாலின் காலத்தில் நடைமுறைக்கு வரவில்லை. மக்களிடையே உள்ள முரண்பாடுகளைச் சரியாகக் கையாளும் வழி அவருக்குத் தெரிந்திருக்கவில்லை. கூட்டுப் பண்ணைகளை உருவாக்கவும் அவற்றிலிருந்து அரசுக்குத் தேவையான உற்பத்திப் பொருள்களை எடுத்துச் செல்வதற்கான இயந்திர டிராக்டர் நிலையங்களை ஏற்படுத்துவதற்காகவும் அவர் எடுத்த நடவடிக்கைகள் ஈவிரக்கமற்றவை. "உதாரணங்கள் மூலம் மக்களை வென்றெடுப்பது" என்ற லெனினின் போதனைகளை அவர் அடியோடு மறந்துவிட்டார். நகரத்துக்கும், நாட்டுப்புறத்துக்கும் உள்ள முரண்பாடு, உடல் உழைப்புக்கும், மூளை உழைப்புக்கும் உள்ள முரண்பாடு, அதிகாரவர்க்கம், மக்கள் ஆகியோருக்குள்ள முரண்பாடு, இராணுவம், மக்கள் ஆகியோரிடையே உள்ள முரண்பாடு ஆகியவற்றைத் தீர்வு செய்வதற்கான எந்த சிந்தனையும் ஸ்டாலினிடத்தில் இல்லை. முரண்பாடுகள் தோன்றியபோதெல்லாம் ஸ்டாலின் சவுக்கடி வைத்தியத்தையே தொடர்ந்து செய்தார். ஸ்டாலினது இத்தகைய செயல்கள் நாட்டுப்புற ஏழைமக்களிடம் சோசலிச அரசின் மீது நம்பிக்கையில்லாமையையும் ஒரு விரோத மனப்பான்மையையும் உருவாக்கியது. புரட்சிக்கு மனமுவந்து காணிக்கையைத் தரும் வகையில் அவர்கள் வென்றெடுக்கப் படவில்லை. எனவே விவசாயி வர்க்கத்தின் உடைமைசேர்க்கும்மனப்பான்மை (acquisitive mentality) மாறவுமில்லை. ரயில்வே நிலையம், பூங்கா, சந்தைகள் முதலானவற்றில் திருட்டுத்தனமாகப் பொருட்களை விற்பது என்பது சாதாரணமான நிகழ்ச்சியாகியிருந்தது.

சோவியத் சிவப்பு பூர்ஷ்வா வர்க்கமாக இருக்கும் கூட்டுப்பண்ணை மானேஜர்களுக்கு இது சௌகரியமான ஏற்பாடாயிற்று. இவர்கள் புரட்சிக்கு முன்பிருந்த பூர்ஷ்வா—அதிகார வர்க்கங்களின் இடையறுத் தொடர்ச்சிகளே. கெடுபிடித்தனமான கேந்திரப் படுத்துதல் (centralisation), 'மேலிருந்து' எடுக்கப்படும் முரட்டுத்தனமான முடிவுகள் ஆகியவை மக்களைப் புரட்சியிலிருந்து தள்ளி வைத்தன. சோவியத் யூனியனில் கனரகத் தொழில்களுக்குக் கொடுக்கப்பட்ட முக்கியத்துவம் நுகர்வுப் பொருள்களின் (consumer goods) தட்டுப் பாட்டைஏற்படுத்தியது. ஸ்டாலினின் கூட்டுப் பண்ணைக் கோட்பாடு உணவுப் பொருட்களின் தட்டுப்பாட்டை ஏற்படுத்தியது. இந்த அம்சங்களையெல்லாம் 'கான்ஸர் வார்டு' எடுத்துக் காட்டுகிறது.

பொருளாதார அடிப்படையை மாற்றினல் மேல்கட்டுமானம் தானே மாறும் என்ற ஸ்டாலினிசக் கொள்கைக்குச் சாதகமான 'விஞ்ஞானக்' கோட்பாடுகள்மட்டுமே ஸ்டாலினுல் ஆதரிக்கப்பட்டன. என்ஜினீயரிங், கணிதம் கனரகத் தொழில்களுக்கு மிக மிக முக்கியமானவை யாதலால் அவற்றில் ஸ்டாலின் கை வைக்கவில்லை போலும். பொருளாதாரத் துறையிலன்றி, உயிரியல், தாவரவியல் முதலிய விஞ்ஞானத் துறைகளில் கூட ஸ்டாலினின் கருத்தாதிக்கம் மேலோங்கியது. லைசெங்கோ, மிச்சுரின் ஆகிய விஞ்ஞானிகள் ஸ்டாலினுல் ஆதரிக்கப்பட்டார்கள். இவர்கள் Behavioural Science என்ற கோட்பாட்டைக் கொண்டிருந்தார்கள். தாவரங்கள் அல்லது உயிர்களின் சூழ்நிலையை மாற்றிவிட்டாலே போதும், அவற்றுக்கு உயிரியல் தொடர்பு (genetical lineage) என்பதே இல்லை என்று கூறினர்கள். இவர்கள் கருத்துப்படி இயந்திரவியல் ரீதியில் இவற்றின் தன்மைகளை நமது விருப்பங்களுக்கு உகந்த முறையில் மாற்றியமைக்க முடியும். இவர்களுக்கு மாறுபட்ட கருத்துக்கள் பூர்ஷ்வா பிற்போக்குக் கருத்துக்கள் என்று நிராகரிக்கப்பட்டன. இந்த notorious Lysenko Theory சோவியத் நாட்டுக்கு வெளியே இருந்தமார்க்சீய வாதிகளாக இருந்த அநேக விஞ்ஞானிகளால் கூட மறுக்கப்பட்டது. அத்துடன் விஞ்ஞானத்தைப்பற்றிய தத்துவார்த்த முடிவுகள் பற்றிய பிரச்சினையில் ஒரு கட்சி முடிவெடுப்பது மேலை நாடுகளில் கடுமையான விமர்சனத்துக்கு உரியதாயிற்று. ஸ்டாலின் விஞ்ஞானத் துறையில் எடுத்த நிலைபாட்டை 'கான்ஸர் வார்டு' பாத்திரமான பேராசிரியர் ஷுலிபின் கூறுகிருர். லைசெங்கோ, மிச்சுரின் பற்றிக் குறிப்பிடும் இவர் கேட்கிருர் "நான் பணியாற்றிய பல்கலைக் கழகத்தில், நான் போதித்த இயங்கியல் பொருண்மை வாதத் துறையிலிருந்து (Chair of Dialectical Materialism) ஐன்ஸ்டினின் சார்புநிலைக் கொள்கை எதிர்ப்புரட்சி இருட்டுக் கொள்கை என்று அறிவிக்குமாறு கால் நூற்ருண்டுகளுக்கு முன்பு நான் கட்டாயப் படுத்தப்படவில்லையா?"

ஐன்ஸ்டினின் சார்பு நிலைக் கொள்கை, உயிரியல் தொடர்புக் கொள்கை ஆகியவை மார்க்சியத்துக்குச் சாதகமான, அதனைச் செழுமைப் படுத்தும் கொள்கைகளாகும். ஸ்டாலினை அடுத்த காலத்தில், இவை மார்க்சியத்துக்கு உகந்தவையாக சோவியத் ரஷ்யாவிலேயே விளக்கப்பட்டன. அவற்றை நிராகரித்தது ஸ்டாலினின் சித்தாந்த ஞானக்குறைவேயன்றி, மார்க்சீயத்தின் குறைபாடல்ல.

ஸ்டாலின் காலத்தில் சோசலிச யதார்த்த வாதம் என்ற இலக்கியக் கோட்பாடு கூட வறட்டுத்தனமாகவே புரிந்து கொள்ளப்பட்டது. சோசலிச யதார்த்தவாத இலக்கியத்துக்கு யதார்த்தத்தைப் படம் பிடிப்பதோடு போராட்டம்—விமர்சனம்—மாற்றம் (Struggle-Criticism-Transformation) என்ற அம்சங்களைச் சிந்தனைத் துறையில் செய்ய வேண்டிய சமுதாயக் கடமையும் உண்டு. நிகழ்காலப் போராட்டங்களின் அடிப்படையில் எழுந்து எதிர்காலச் சிறப்பைக் கூற வேண்டும் என்கிற கார்க்கியின் "மூன்ருவது யதார்த்தம்" (Third Reality) என்கிற கோட்பாடு, ஸ்டாலினுல் ஊக்குவிக்கப்பட்ட எழுத்தாளர்களால் எப்படிக் கையாளப்பட்டது என்பதை 'கான்ஸர் வார்டு' காட்டுகிறது. நிகழ்வனவற்றைப் பற்றிய விமர்சனம் ஸ்டாலின் காலத்தில் பெரும்பாலும் மறுக்கப்பட்டது. எனவே விமர்சனம் அறவே தவிர்க்கப்பட்டு, எங்கோ தொலைவிலிருக்கும் ஒரு எல்டொரடோ (Third Reality) வைப் பற்றிய அவர்களது சித்தரிப்பு போலித்தனமாக இருந்ததில் ஆச்சரியமில்லை. இதே முறையில் சமகாலச் சமுதாயம்பற்றிய விமர்சனம் என்ற முறையில் சோல்ஸனிட்ஸினின் 'கான்சர் வார்டு' புறக்கணிக்கக் கூடியதன்று. நடைமுறைச் செயல்களில் ஈடுபடாமல் கூடிக்கூடி விவாதித்துப் பொழுதைப் போக்கிய கட்சி ஊழியர்களை விமர்சித்த மாயாகோவ்ஸ்கி லெனினுல் பாராட்டப்பட்டார். அதே மாயாகோவ்ஸ்கி ஸ்டாலின் காலத்தில் தற்கொலை செய்து கொண்டார். யெசினின், பதயேவ் முதலியோரும் ஸ்டாலின் காலத்தில்தான் தற்கொலை செய்து கொண்டனர். கலைத்தன்மையற்ற ஸ்டாலின் புகழ்ச்சியை மட்டும் கொண்டிருந்த படைப்புகளுக்கு மட்டுமே இடமிருந்தது என்கிற சோல்ஸனிட்ஸினின் விமர்சனம் மிகையாகத் தோன்றினலும், இக்கூற்றில் அறவே உண்மையில்லை என்று மறுத்துவிட

முடியுமா? ஸ்டாலின் காலத்தில், விமர்சனம், சுயவிமர்சனம் என்பன விரல்விட்டு எண்ணக்கூடிய தலைமைக்கு மட்டுமே அனுமதிக்கப்பட்ட சூழ்நிலையில், பரந்துபட்ட மக்களின் சாதனங்களாக அவை இல்லாத நிலைமையில், ஸ்டாலின் காலத்திலிருந்தே சலுகை பெற்ற சமுதாயப் பிரிவாக எழுந்த எழுத்தாளர் கூட்டத்துக்கு அவை தேவைப்படாத நிலையில், விவாதங்களின் மூலம் சரியான கருத்துக்கு வருவது என்பதே இருந்ததில்லை என்ற உண்மையை ரஸனேவின் மகளான ஆவியெட்டின் கூற்றுமூலம் காட்டுகிறார் சோல்ஸனிட்ஸின். "உதாரணமாக அவர்கள் (எழுத்தாளர்கள்) முரண்பாடே இருக்கக் கூடாது என்று கூறிவந்தார்கள். ஆனால் முரண்பாட்டின் மறைவு என்பது தவறான கோட்பாடு என்று பேசுகிறார்கள். ஒரு அபிப்பிராய வேறுபாடு இருந்து, ஒரு சிலர் பழைய பாதையைப் பற்றிப் பேசவும், வேறுசிலர் புதிய பாணியைப் பற்றிப் பேசுவதுமாக இருந்தால் ஏதோவொரு மாற்றம் ஏற்பட்டுள்ளது தெளிவாகும். ஆனால் எல்லாரும் திடீரென்று ஒரே சமயத்தில் புதிய பாதையைப் பற்றிப்பேசினால் மாற்றம் ஏதும் நிகழ்ந்திருப்பதுவே உனக்கு புலப்படாமல் போகும்." ஸ்டாலினிசத்திலிருந்து குருஷ்சேவிசத்திற்குத் தாவியபோது சோவியத்யூனியனின் கட்சி முதலிய வட்டாரங்களுக்கு இக்கருத்து பொருந்துவதாகிறது.

சோவியத் ராணுவம்பற்றிய விமர்சனமும் 'கான்ஸர் வார்டி'ல் உள்ளது. ஒரு பூர்ஷ்வா ராணுவத்தில் உள்ள ஏற்றத்தாழ்வு, அதிகாரிகளுக்கும் சிப்பாய்களுக்கும் இடையே உள்ள இரும்புச் சுவர், மெடல்கள், பட்டைகள், நட்சத்திரங்கள், விருதுகள் இவைகளால் பிரிக்கப்படும் வெவ்வேறு அந்தஸ்துகள் ஆகியவை சுட்டிக் காட்டப்படுகின்றன. அந்தஸ்துகள் நீக்கப்பட்ட ஒரு மக்கள் சேனையாக அல்லாமல் பூர்ஷ்வா நாடொன்றின் நிலைப்படை (Standing Army) யாக சோவியத் 'செஞ்சேனை' இருந்து வந்துள்ளதை இவைதெரிவிக்கின்றன. சோசலிசத் தாய்நாட்டிற்கும் அதன் உழைக்கும் மக்களுக்கும் உயிர்த்தியாகம் செய்வதைக் காட்டிலும் பெரும் விருது இருக்க முடியாது என்ற உணர்வை ஏற்படுத்தாமல், இராணுவத்தினருக்கும் ஊக்கம் (material incentive) கொடுத்தவர் ஸ்டாலின். கிழக்கு ஐரோப்பிய நாடுகளிலும் ஜெர்மனியிலும் சோவியத் செஞ்சேனை நுழைந்தபோது, இராணுவத்தினர் பலர் பல்வேறு பொருள்களைத் திரட்டிக் கொள்வதை அனுமதித்தவர் ஸ்டாலின். இதனை சோல்ஸனிட்ஸின் தனது "முதல் வட்டம்" (First Circle) என்ற நாவலில் எடுத்துக் காட்டுகிறார். சோவியத் ராணுவம் மஞ்சூரியாவில் ஜப்பானியப் படைகளை முறித்துத் திரும்பும் போது, மக்டேன், ஹார்பின் போன்ற நகரங்களிலிருந்த தொழிற்சாலைகளின் இயந்திரச் சாமான்கள் பலவற்றை ரஷ்யாவுக்கு எடுத்துச் சென்றது. இதைச் சீனக் கம்யூனிஸ்டுகளே கூட மறுத்தாலும், உண்மை, தஸ்தாவேஜுக்களில் உள்ளது.

'லெனின்கிராட்' முற்றுகையினால் பல இலட்சக்கணக்கான மக்கள் இறந்ததற்கு ஹிட்லர் மட்டுமல்லாமல், ஸ்டாலினும் காரணம் என்கிறான் கதாநாயகன் ஒலக். லெனின்கிராட் ஒதுக்குப் புறமாக உள்ள நகரம். எந்த நேரமும் ஹிட்லர் தாக்குவான் என்று தெரிந்திருந்தும் அந்நகரின் மக்களை வெளியேற்றவோ, அல்லது அவர்களுக்குத் தேவையான உணவு முதலியவற்றை முன் கூட்டியே தேவையான அளவு சேர்த்துவைக்கவோ எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கவில்லை என்கிறான் ஒலக். ஹிட்லரின் மூர்க்கத்தனமான தாக்குதலுக்கு நேசநாடுகளில் முதல் முதலில் ஆளானது சோவியத் யூனியனாகும். நேசநாடுகளில் சில சோவியத் சோசலிச அரசு ஹிட்லரால் வீழ்த்தப்படும் நன்னாளையும் எதிர்பார்த்தனவாகும் தன்னந்தனியாக நின்று மூர்க்கத்தனமான தாக்குதலை எதிர் நோக்க வேண்டியிருந்த சோவியத் யூனியனில் பல பின்னடைவுகள் தவிர்க்க முடியாதவை. அதே நேரத்தில் ஸ்டாலின்கிராட் போராட்டம் சுற்றிவளைத்தோரைச் சுற்றி வளைத்தல் (encirclement of the encirclement) கிழக்கு ஐரோப்பிய நாடுகளில் பாசிசப் படைகளை முறித்தது ஆகிய நிகழ்ச்சிகள் ஸ்டாலினுக்குப் பெருமை தருபவை. எனவே லெனின் கிராட் துயரத்துக்கு ஸ்டாலின் மீது பழி சுமத்துவது அன்றிருந்த வரலாற்றுச் சூழ்நிலைமைகளை மறந்துவிடுவதும், பாசிச எதிர்ப்பு யுத்தத்தில் ஸ்டாலினின் சிறப்பான பாத்திரத்தை மறந்து விடுவதுமாகும்.

அக்டோபர்புரட்சியை சோல்ஸனிட்ஸின் வரவேற்றதாகவே தெரிகிறது. பேராசிரியர் ஷூலிபின் மூலமாக தனது கருத்துக்களைச் சொல்லும் ஸோல்சனிட்ஸின் லெனினின் மரணத்துக்குப் பின்னர்தான் நிலைமைகள் மாறிவிட்டன என்றும் கருதுவதாகத் தெரிகிறது. ஒலக்கிடம் பேசும்போது பேராசிரியர் ஷூலிபின் சொல்கிறார் "1917க்குப் பிறகு நமக்கு என்ன நடந்தது? எப்படி நாம் தளர்ந்து போனோம். நம்மை வீழ்த்தியதற்கு முக்கியகாரணம் யாது? பயமா? சந்தைத்திடல் சிலைகளா? கலையரங்கச் சிலைகளா? சரி, நான் ஒரு சிறிய மனிதன். ஆனால் க்ரூப்ஸ்கயா? அவருக்குப் புரிந்திருக்கவில்லையா? என்ன நடக்கிறது என்பதை அவர் உணரவில்லையா? ஏன் அவர் தன் குரலை உயர்த்தவில்லை? அவருடைய ஒரே ஒரு அறிக்கை நமக்கு எவ்வளவு பயன்பட்டிருக்கும்—அந்த அறிக்கை அவரது

உயிருக்கே உலை வைத்திருந்தாலும். பிறகு ஓர்லிகிட்ஸே என்ன செய்தார்?...அவர்கள் பேசாமல் இருந்தார்கள். அல்லது 'மர்ம மான' சூழ்நிலையில் இறந்து போனார்கள்". லெனினின் துணைவியாரான க்ருப்ஸ்கயாரோ அல்லது மாபெரும் போல்ஷ்விக்கான ஓர்லி கிட்ஸேவோ அறிக்கைவிட்டிருந்தால் சோல் ஸனிட்ஸின் நினைப்பதுபோல பெருமளவுக்குப் பயன்பட்டிருக்கும் என்பது ஐயத்துக்குரியதே. ஆனால் புரட்சிப்பாதை சரிவரச் செல்லவில்லை, புரட்சியின் முன்னணித் தலைவர்களே 'வாய் மூடி' யிருந்தனர் என்ற விமர்சனம் புறக் கணிக்கக் கூடியதல்ல.

ஒரு நாட்டின் நிலைமையை அந்தநாட்டு மாதர்களுக்குள்ள அந்தஸ்தைக் கொண்டு தான் மதிப்பிட முடியும். சோவியத் யூனிய னில் மாதர்கள் நிலையை 'கான்ஸர் வார்டு' காட்டுகிறது. "தாமரை"—பிப்ரவரி 73இதழில் எஸ். அம்பலவாணன் எழுதியுள்ளது போல சோவியத் யூனியனின் மாதர்களை இழிவுபடுத் தும் நோக்கம் சோல்சனிட்சினுக்கு இருப்ப தாகத் தோன்றவில்லை. யதார்த்தத்தை வெளிப்படுத்துவதே அதனை இழிவு படுத்து வது என்ற கூற்றை யாரும் ஏற்கமாட்டார் கள்.

ஆஸ்யா என்னும் நோயாளிப் பெண் மற்றொரு நோயாளியிடம் சொல்கிறாள் "என்னோடு எட்டாம் வகுப்பில் படித்துக் கொண்டிருந்த ஒருத்தி கர்ப்பவதியானாள். தனியறையில் வாழ்ந்துவந்த அவளிடம் ஒரு சேமிப்பு வங்கி பாஸ்புத்தகம் இருந்தது."

யெஃப்ரம் என்ற நோயாளி. இவன் சிறுபான்மை இனத்தவன். அவன் பெண் ணாசை பிடித்தவன். எத்தனை பெண்களை அவன் அனுபவித்தவன் என்பதை யாரும் கணக்கிட்டுச் சொல்லமுடியாது. எல்லாரும் பெண்களுக்குச் சமத்துவம் என்று பேசினாலும் பெண்கள் பரிபூரணமான மக்கள் என்பதை அவனால் நினைத்துப் பார்க்கவே முடிவதில்லை.

ஸோயா ஒரு நர்ஸ். அவள் எத்தனையோ இளைஞர்களுடன் பழகியிருக்கிறாள். கட்டிப் பிடித்து நடனமாடியிருக்கிறாள். "அவள் சந்தித்த இளைஞர்கள் எல்லாம் அவளோடு நடனமாடினார்கள். ஒரு நடைக்காக வெளியே சென்றார்கள். எல்லார் நோக்கமும் ஒன்று தான். கொஞ்சநேரம் சூடேற்றிக் கொள்வது கேளிக்கையை அனுபவித்து விட்டு நடைவிட வேண்டியது". அவர்கள் தங்களுக்குள்ளா கவே பேசிக்கொள்வதுண்டு. "நான் மணம் புரிந்து கொள்ளலாம். ஆனால் ஓரிரு மாலை நேரங்களுக்குள் ஒரு புது சிநேகிதியை அடைவதற்கு வாய்ப்பு இருக்கும்போது நான் ஏன் அலட்டிக் கொள்ள வேண்டும்."

ஒலக் (கதாநாயகன்) பிரஜா உரிமையற்ற முன்னாள் கைதி, கேட்கிறான் "உங்களைச் சுற்றியுள்ள ஒவ்வொரு பெண்ணும் உங்களி டம் சரணடையத் தயாராக இருக்கும்போது, நீங்கள் மட்டும் அதற்கு இடம் கொடுக்காமல் எப்படி இருக்க முடியும்."

சாலி என்கிற நோயாளியின் (இவன் ஒரு வெள்ளைரஷ்யன்) தத்துவம்:—

Kitchen maid or Lady Muck

They're all the same, they like to fuck

பெண்கள் இவ்வளவு மலிவாகக் கருதப் படுவதற்கு வரலாற்று ரீதியான ஒரு கார ணத்தைச் சிலர் கூறலாம். உள்நாட்டுப் போர், உலகப்போர் இவைகளின் காரணமாக சோவியத் யூனியன் மிகப் பெரிய அளவில் தன் ஆடவர்களைத் தியாகம்செய்ய வேண்டி யிருந்தது. இதன் காரணமாக பெண்களின் தொகை ஆடவரின் தொகையைக் காட்டிலும் அதிகமாகியது. போர்முனையிலிருந்து நெடு நாள் வீட்டுக்குத் திரும்பாத கணவனை மறந்துபுதுக் காதலனுடன் ஓடிவிடும் ஜமீலா, ஆடவரின் உறவே கிடைக்காதுபோய் பாலுணர்வு மிகுந்து கிழவர்களைச் சுற்றித் திரி யும் டான் நதிக்கரை பெண்கள் ஆகியோரை சிங்கிஸ் அய்த்மதோவ், ஷோலக்கோவ் போன்றோர் தம் கதைகளில் சித்தரிக்கின்ற னர். இவர்கள் மானுட வாழ்வில் மிக முக்கிய மான அம்சமாகவே பாலுணர்வு, காதல் ஆகியவற்றைக் கருதி தம் கதைகளில் விவா திக்கின்றனர். இவை பெரும் சர்ச்சைக்கிட மான விஷயங்கள். ஸோல்ஸனிட்ஸின் சோவி யத் மாதரை இழிவாகக் காட்டுகிறார் என்று எஸ். அம்பலவாணன் (தாமரை—பிப்ரவரி 73) கருதினால் சிங்கிஸ் அய்த்மதோவையும் ஷோலக்கோவையும் இதே காரணத்துக்காக தண்டிக்கலாமே!

தந்தைவழி மனப்பான்மை (patriarchal mentality) ஆதிக்கம் செலுத்திய நிலவுடமை சமுதாயங்கள் சோவியத் குடியரசுகளான உடனே நிலைமைகள் முற்றாக மாற முடியாது. பெண்களை இரண்டாம் பட்சமாகக் கருதும் ஆடவரின் மனப்பான்மையை மாற்றுவது என்பது இடைவிடாத சித்தாந்தப் போராட் டத்தினாலும் பெண்குலத்துக்கு எல்லாத்துறை களிலும் சமத்துவம் கொடுப்பதன் மூலமுமே சாத்தியமாகும். இது ஒரு நீண்ட காலப் போராட்டமாகும். பொருளியல் நிலைமை களும் அவற்றோடு சித்தாந்த வளர்ச்சியும் ஏற்படுவது கொண்டே நிலைமைகள் மாறும். ரஷ்யாவில் இவை சரியாக நடைபெறவில்லை. ஸ்டாலின் இப் பிரச்சினையை ஊன்றிக் கவனிக்கவேயில்லை. அவர்தான் ஆடவரும்

பெண்டிரும் இணைந்து கல்வி நிறுவனங்களில் படிப்பதை (co-education) தடுத்தவராயிற்றே! ஸோல்ஸனிட்ஸ்ன் பெண்கள் நிலையைப் படம் பிடிப்பதன் மூலம் சமுதாயத்தில் நடைபெற வேண்டிய மாறுதல் பற்றிய அறிவை மார்க்சீயவாதிகள் பெருக்கிக் கொள்ளவே வழி செய்கிறார்.

புரட்சி இலட்சியம், மார்க்சீயம் ஆகியவற்றை மக்கள் இறுகப் பற்றிக் கொள்ளும் இலட்சியங்களாக ஸ்டாலின் மாற்றவில்லை என்பதை பிரச்சாரச் செய்திகளையும். வேண்டாத பாட்டுகளையும் ஒலிப்பரப்பும் ரேடியோ, மலைக்கவைக்கும் புள்ளி விவரங்கள், பொது விடங்களிலெல்லாம் காணப்படும் "சிகப்பு மூலை" என்ற சிறிய வாசகசாலைகள்—இவையனைத்திலும் உற்சாகம் கொள்ளாத நோயாளிகளின் மனம் ஆகியவற்றின் மூலமாக "கான்ஸர் வார்டு" உணர்த்துகிறது.

இதுவரை கூறப்பட்ட விளக்கங்களிலிருந்து ஒன்று தெளிவாகத் தெரிகிறது. சோல்ஸனிட்ஸின் சரியான கம்யூனிஸ்டோ இல்லையோ, அவரது கூற்றுக்கள் பல உண்மையானவை. படப்பிடிப்புகள் பல சரியானவை. தேவையானவையும் கூட. கம்யூனிஸ்டுகளாகத் தங்களைத் தம்பட்டமடித்துக் கொள்பவர்களை விட இவரது எழுத்தில் அதிகமான சமுதாய உண்மை அடங்கியிருக்கிறது. இவரது கூற்றுக்களை உண்மையில்லை என்று மறுக்க இயலாமல், அம்பலவாணன் போன்றவர்கள் இவை தேவையில்லை என்று மட்டுமே கூறமுடியும். மறுக்க முடியாத விமர்சனங்களுக்குப் பதில் கூற முடியாமல், மாஸ்கோவில் அந்நியச் செலாவணிக்கு ஆடம்பரப் பொருள்கள் விற்கும் கடைகளில் நடமாடுகிறார் என்றும் ஸ்வீடனிலிருந்து அவருக்கு நிறையப் பணம் வருகிறது என்றும் அபத்தமாக எழுதிக் கொண்டு போகலாம். இதில் வேடிக்கை என்ன வென்றால் சோவியத்யூனியனில் முதலாளித்துவப் பிற்போக்குச் சக்திகளிடமிருந்து பணம் பெற்றுக் கொள்பவர்களை அனுமதிக்கிறார்கள் என்றும், அந்நியச் செலாவணிக்குப் பொருள்கள் விற்கும் திருட்டுச் சந்தைகள் மாஸ்கோவில் உள்ளன என்றும் அம்பலவாணனே கூறுவதாகும். அதைவிட வேடிக்கை, ஸ்வீடனிலிருந்து மாஸ்கோவுக்கு மணியார்டர் மூலமாகப் பணம் அனுப்பப்படுகிறதாம்!

"ரஷ்யப்புரட்சியின் நிலைக் கண்ணாடி" என்று லெனின் டால்ஸ்டாயை வர்ணித்தார் ரஷ்யக் கிராமங்களை — புரட்சி வெடிப்பதற்கான காலத்தைநெருங்கிய உழவர் உலகத்தை டால்ஸ்டாய் பிரதிபலித்தார். அவரது தீர்வோ 'கிறிஸ்துவ சோசலிச'த்தி அடங்கியிருந்தது. அதேபோல சோல்ஸனிட்ஸின் ஸ்டாலின் கால ரஷ்யாவைப் படம் பிடித்துக் காட்டுகிறார். ஆனால் அவரது முடிவும் ஏறக்குறைய கிறிஸ்துவ சோசலிசமே.

கதாநாயகன் ஒலக் கோஸ்டோக்ளோடோவ் புரட்சிக்குப் பின் பிறந்தவன். ஸ்டாலின் ஆட்சிக் காலத்தில் ராணுவத்தில் சேர்ந்து அநியாயமான தண்டனைக்குள்ளாகி சிறை முகாமில் அவதிப்பட்டு, பிரஜாவுரிமை இழந்து, கான்ஸர் நோயால் தாக்குண்டு, வறுமையில் வாடும் மனிதன். புரட்சிகரமான ஒரு மாறுதல் கட்டத்தில்—சிக்கலான நிலைமைகளில்—நடைபெற வேண்டிய போராட்டங்களும் மாறுதல்களும் முற்றாக முறையாக நடைபெறாத கால கட்டத்தில் — நாட்டில் இருள் விலகாத தருணத்தில்—சரியான தத்துவக் கண்ணோட்டமும் நடைமுறையும் அற்ற நிலையில் — அவனுக்கு நாடு முழுவதுமே இருண்டு கிடப்பது அவன் அனுபவத்தின் விளைவு. அவன் ஒரு கடிதத்தில் எழுதுகிறான். "எனது பூட்சுகளை மாட்டிக்கொண்டு, ஒரு பெண்ணின் கவுனை அணிந்து அதை எனது ராணுவ பெல்டினால் சுற்றிக் கொண்டு... ஐந்து நிமிடத்தில் கடைத்தெருவுக்கு வந்து சேர்கிறேன். எனது தோற்றம் கடைத் தெருவிலோ, அல்லது பக்கத்துச் சந்துகளிலோ எந்த விதமான ஆச்சரியத்தையும், சிரிப்பையும் வரவழைக்கவில்லை. எதையும் பார்த்துப் பழகிப்போய்விட்ட நம்நாட்டின் ஆன்மீகநலக் குறைவின் அடையாளமாகவே தான் இதைக் கருதுகிறேன்."

பேராசிரியர் ஷுலுபின், ஒலக்கிடம் கேட்கிறார்:—"நீ புரட்சிக்குப் பின் பிறந்தவன். ஆனால் அவர்கள் உன்னை சிறையிலடைத்தனர். சரி, நீ சோசலிசத்தின் மீது நம்பிக்கை யிழந்து விட்டாயா இல்லையா?

ஒலக் கூறுகிறான் "எனக்குத் தெரியாது விஷயங்கள் மிகக் கடினமானவையாக இருந்தன. சில சமயங்களில் அளவற்ற சினத்தின் காரணமாக நீங்கள் விரும்பிய இலக்கையும் தாண்டி வெகுதூரம் போய்விட நேரிடும்".

உண்மை! விஷயங்கள் கனமாக—கொடூரமாக இருக்கும் நிலையில்—சினம் முதலிய உணர்ச்சிக் கொந்தளிப்புச் சூழலில், சரியான முடிவு எடுக்க முடியாது. இத்தகைய நிலைக்கு உந்தப்பட்டவர் சோல்ஸனிட்ஸின். இவ்வகையில் அவர் ஸ்டாலினுடைய எதிர் விளைவு. ஒலக் கோஸ்டோக்ளோடோவ் மாதிரி ஸோல்

ஸனிட்ஸின் went farther than he wanted to, out of sheer fury. இதற்கான சான்றுகள் கான்சர் வார்டு, முதல் வட்டம், ஆகஸ்ட் 1914 ஆகிய நாவல்கள், அவரது நோபல் உரை ஆகியவற்றில் காணப்படுகின்றன என்பதும் உண்மையே.

சோவியத் சமுதாயத்தில் விளைந்த எதிர்மறைப் போக்குகளால் நம்பிக்கை குன்றி, ஏமாற்றமடைந்து, வாழ்க்கையில் பிடிப்பிழந்து கடைசியில் புற்றுநோய்க்குப் பலியான பாத்திரங்கள் மூலம் டால்ஸ்டாயைப் புகுத்துகிறார் ஸோல்ஸனிட்ஸின். "மனிதன் எதற்காக வாழ வேண்டும்" என்ற டால்ஸ்டாயின் கேள்வியை சோல்ஸனிட்ஸின் நினைவூட்டுகிறார். இந்தக் கேள்வி சமுதாயத்தில் சிக்கல் மிகும்போதெல்லாம் பீறிட்டுக் கிளம்பும் நியாயமான கேள்வியாகும். சோசலிசம், பாட்டாளி மக்களுக்குச் சேவை செய்தல் என்பவை சாதாரண மக்களுக்குச் சம்பந்தமற்ற வையாகச் சீரழிவதில் ஸ்டாலினும் சோவியத் அதிகார வர்க்கமும் வெற்றியடைந்துவிட்டதாலும், சோசலிச அரசு என்பது ஏமாற்றமளிக்கக் கூடிய பிரமையாக அவர்களுக்கு மாறிவிட்டதாலும், நிர்க்கதியான நோயாளிகளுக்கு "சகமனிதரிடையே அன்பு காட்டுதல்" என்பது ஆறுதளிக்கக் கூடிய ஒன்றாக இருக்கக் கூடும் என்பதில் ஐயமில்லை. ஒரு நாடு முழுவதுமே இத்தகைய நோயாளிகள் பரவலாக இருக்கும் நிலையில் இது மேலும் உண்மையாகிறது. சகத் தொழிலாளரை நேசிக்காது ஒதுங்கி வாழும் ரஸனேவ்கள் லெனின் பெயரால் டால்ஸ்டாயை விமர்சிப்பது எவ்வளவு மாய்மாலத் தன்மை கொண்டதோ, அந்த அளவு ரஸனேவ்களைச் சாடும் வகையில் டால்ஸ்டாயிசத்தை விமர்சன நோக்கமில்லாமல் உயர்த்துவதுமாகும்.

டால்ஸ்டாயின் "சகமனிதரிடையே அன்பு காட்டுதல்" என்கிற அரூபமான மனிதாபிமான நெறியை (abstract humanist ideal) உலகுதழுவிய முற்று முதலான (absolute universal ethic) அறக்கோட்பாடாக உருவாக்க முயல்கிறார் சோல்ஸனிட்சின். டால்ஸ்டாய், ரஸ்கின், காந்தி முதலியோரின் இந்த ஆகாயத்தில் தொங்கும் அறக்கோட்பாடுகளின் ஒட்டாண்டித்தனம் (bankruptcy) வரலாற்றால் பலமுறை நிரூபணம் செய்யப்பட்டு விட்டது. ஒடுக்குபவரும் ஒடுக்கப்படுபவரும் கடுஞ் சமரத்தில் தீர்வு காண்பதற்கான தருணங்களில் இக்கோட்பாடுகளைப் பயன்படுத்தியவர்கள் கடைந்தெடுத்த பிற்போக்குவாதிகளேயாவர். மார்க்சியம் உழைக்கும் மக்களிடையே பரஸ்பரம் அன்பு செலுத்துவதைச் சிறந்த அறக்கோட்பாடாகக் கருதுகிறது. ஸ்டாலினின் சவுக்கடி முறைகளுக்கு மாறாக மக்களிடையே உள்ள முரண்பாடுகளைப் பகைத் தன்மையற்ற முரண்பாடுகளாக —அன்பு வழி கொண்டு—பாவிக்க வேண்டுமென்று சரியான மார்க்சீயம் கருதுகிறது. "உன்னை அடக்கி மடக்கியும், மாய்மால வார்த்தைகளால் மயக்கியும் வருகிற சுரண்டல் வர்க்கத்தின் மீது வெறுப்பு உமிழும்போது தான், நீ உழைக்கும் மக்களிடம் உண்மையான அன்பைக் காட்டுகிறாய்" என்று மார்க்சீயம் போதிக்கிறது. "நீ உழைக்கும் மக்கள் மீது உண்மையான அன்பைக் காட்டுவதனால் தான், அவர்களைச் சுரண்டுபவர்கள் மீது கடுங்கோபம் கொள்கிறாய்" என்பதும் உண்மையே. அறக்கோட்பாடுகளின் சார்பு நிலைத் தன்மையை விஞ்ஞான ரீதியாகத் தெளிவுப்படுத்துகிறது மார்க்சீயம். மார்க்சின் நண்பரான கவி ஹெரகார்த்தின் "இதுவரை நேசித்தது போதும், இனி வெறுக்கத் துவங்குவோம்" என்ற கவிதையை விமர்சித்து, "வெறுத்தது போதும், இனி நேசிக்கத் துவங்குவோம்" என்கிறார் 'கான்ஸர் வார்டு" பாத்திரமான பேராசிரியர் ஷுலிபின். வெறுப்பின் உச்சகட்டத்தில், அதை மனித ஆன்மா தாங்க முடியாதபோது அதன் எதிர்நிலையாகவும் "அன்பு" தோன்றலாம். 1905 புரட்சியின் தோல்விக்குப்பின் கார்க்கி, லூனசார்ஸ்கி முதலானோர் God Building என்ற இயக்கத்தைத் துவக்கியதும், இந்த "அன்பு" கருதியே. இதே காரணத்தினால்தான் "முதல்வட்டம்" நாவலின் பாத்திரமான லெவ் ரூபின் Civic Temples என்ற அமைப்புகளைப்பற்றிச் சிந்திக்கிறான். ஒரு கலைஞனிடம் இத்தகைய போக்கு ஏற்பட்டு விடுவது புரிந்து கொள்ள கூடியதுவே. ஆனால் ஸ்டாலின் காலத்தில் ஏற்பட்ட வெறுப்பும், கவி ஹெரகார்த் சொன்ன வெறுப்பும் ஒன்றல்ல. சுரண்டும் வர்க்கத்துக்கெதிரான வெறுப்பையும், ஸ்டாலின் உருவாக்கிய வெறுப்பையும் ஒன்றெனக் குழம்பிக் கொள்கிறார் ஸோல்ஸனிட்ஸின். கவி ஹெரகார்த்தின் 'வெறுப்பை' உயர்த்துப் பிடிக்கிற உழைக்கும் மக்கள் "அன்பினால் எதிரியின் மனத்தை மாற்றுதல்" என்ற தத்துவத்தின் ஒட்டாண்டித்தனத்தை அம்பலப்படுத்தக் கடமைப் பட்டுள்ளனர். இத்தத்துவம் அரசியல் ரீதியாக மட்டுமல்லாமல் தார்மீக ரீதியாகவும் நிராகரிக்கப் படவேண்டும். ஏனெனில் இது ஒடுக்கப்படும் மக்களைத் துயரச் சுமைதாங்கிகளாக மாற்றி, ஒடுக்கும் வர்க்கத்தை மன்னித்து விடுகிறது.

"மதம் எதார்த்தத்தின் பிரதிபலிப்பு. ஆனால் திரிக்கப்பட்ட பிரதிபலிப்பு. அது உண்மைத் துயரங்களின் பிரதிபலிப்பு. அதேசமயத்தில் அவற்றின் எதிர்ப்பு அது இதயமற்ற உலகத்தின் இதயம். ஒடுக்கப்பட்ட உலகின் பெருமூச்சு. மதம் மக்களுக்கு மயக்கம் தரும் அபின்"—இவை மார்க்சின் கூற்று. மனிதன்

ன்னை இன்னும் இழக்காத, ஆனால் தன்னை உணராத புராதன காலத்தில் அவனுக்கு மந்திரம் (magic) கை கொடுத்தது மாதிரி, அவன் தன்னை இழந்துவிட்ட வர்க்க சமுதாயத்தில், சமயம் ஆறுதல் அளிக்கிறது. துயரங்களின் உண்மைக் காரணங்களை அறிவதற்கும் அவற்றைக் களைவதற்குமான மார்க்கத்தை மார்க்சீயம் சொல்கிறது. சமயங்கள் எப்படிச் சுரண்டும் வர்க்கத்துக்குத் துணைபோகின்றன என்பதற்கு மார்க்ஸ் கூடத் தேவையில்லை. ஒரு ரபேலாவும், ஒரு ரஸ்ஸலும், ஒரு வால்டேரும், ஒரு அனடோல் பிரான்சும், ஒரு இங்கர்சாலும், ஏன் ஒரு பெரியாரும் கூடப் போதும். சோசலிச அரசு சமயத்துக்கும் அரசுக்குமுள்ள உறவைத் துண்டிக்கிறது. போல்ஷ்விக் புரட்சியைத் தொடர்ந்த சோவியத் பாட்டாளிவர்க்க அரசு நாத்திகத்தைப் பரப்பியது, எவ்வகையிலும் தவறானதல்ல. ஆனால் நாத்திகத்தைத் தழுவாதவர்களை, சமயத்தில் நம்பிக்கை குன்றாத மக்களைக் கழுவிலேற்றும் ஒரு புதுவகை Spanish Inquisition மார்க்சீயத்துக்குப் புறம்பானதாகும். எனினும் ஸ்டாலின் காலத்தில் மக்கள் நலன் கருதாத கட்சியதிகாரிகள் பலர் நாத்திகத்தைப் பிரச்சாரம் செய்தனர் என்பதற்காக சமயத்தையும், சமயத்தைப் பின்பற்றுவோர்களையும் ஏன் சோல்ஸனிட்ஸின் ஆதங்கத்தோடு கட்டித் தழுவிக் கொள்கிறார் என்ற கேள்வியும், மாட்ரியோனாவை இலட்சிய பாத்திரமாக மாற்றுகிறார் என்கிற விமர்சனமும் (கசடதபற பிப்ரவரி, 73 கட்டுரை) எழுகின்றன. ஏனெனில் 'கான்ஸர் வார்டில்' சமயவொழுக்கம், இரக்ககுணம், அன்பு முதலிய அருங்குணங்களைக் கொண்ட ஸ்டியோபா என்கிற நோயாளிப் பெண்ணை சோல்ஸனிட்ஸின் அறிமுகப்படுத்துகிறார். ஏழைச் சிறுவன் டையோம்கா கட்சித்தலைவர்களிடம் "மதம் சுரண்டும் வர்க்கத்தின் அபின்" என்ற பாடத்தைப் பெற்றுள்ளான். ஆனால் 'பிற்போக்குவாதி'யான ஸ்டியோபா அவனுக்குத்தான் எத்தனை அன்பு காட்டுகிறாள்! திண்பண்டங்கள் தருகிறான்! எல்லா மனிதரும் ஸ்டியோபா போல இருந்து விட்டால்........கட்சியதிகாரிகளிடம் சிக்கித்தவித்த மாட்ரியோனா ("மாட்ரியோனாவின் இல்லம்"—சோல்ஸனிட்ஸினின் குறுநாவல்), "கான்ஸர் வார்டு" ஸ்டியோபா போன்றோர் (ஸோல்ஸனிட்ஸின் உட்பட) 'அன்பு சமயத்தில்' ஏன் தஞ்சமடைகிறார்கள் என்பதையும் சுட்டிக்காட்ட வேண்டும். சமுதாயத்தில் சீர்கெட்ட நிலைமைகள் முற்றாக மாறாத நிலையில்—தொடர்ந்து மாறிக் கொண்டிருக்கும் நிலையில்—'சமயம்' மக்களின் சில தேவைகளைக் கவனிக்கவே செய்கிறது. அரைகுறை அளவில் இந்த அபின் தேவைப்படுகிறது. இந்நிலையில் சமயத்தை முற்றாக மறுக்கும் நாத்திகம், மக்களால் விரும்பப்பட இயலாததாகும். ஸ்டாலின் காலத்தில் மற்றொரு கட்டத்திலேயே சமயம் புனருத்தாரணம் செய்யப்பட்டதற்குக் காரணம் என்ன? ("முதல் வட்டம்" நாவலில் ஸ்டாலின் சமயத்துக்குப் புத்துயிர்தர விழைந்தது சித்தரிக்கப்படுகிறது.) ஆகவே குறிப்பிட்ட நிலைகளில் நாத்திகத்துக்கு எதிராக 'அன்பு நெறியும்' 'தூய்மையான சமய'மும் கிளம்புவது தவிர்க்க இயலாதது. தவிர, சோல்ஸனிட்ஸின் தழுவிக் கொள்ளும் 'அன்புச் சமயம்' ஒடுக்கப்படும் உலகின் பெருமூச்சாக, இதயமற்ற உலகின் இதயமாகத் தோன்றிய நெறியாகத்தான் இருக்க முடியும்.

சோல்ஸனிட்ஸின்மீது டால்ஸ்டாயிசம் ஆதிக்கம் செலுத்தக் காரணம் என்ன? கிறித்துவ சமயத்தின் குறிப்பிட்ட காலப்போக்கின் பாதிப்பே டால்ஸ்டாயிசத்தை உருவாக்குகிறது. இத்தகைய டால்ஸ்டாயிசம் நிலவுவதற்கும் ஒரு சமுதாய நிலைமை காரணமாக இருக்கவேண்டும். ஸ்டாலின் காலத்திலும் அவருக்குப் பிந்திய காலத்திலும் ரஷ்யாவில் இந்நிலைமைகள் இருக்கவேசெய்தன. இதன்காரணமாகவே சகமனிதரிடம் அன்பு, ஸ்டியோபா அத்தையின் உபதேசம், வெறுப்பே இல்லாத விருப்பு ஆகிய கருத்துக்களை ஸோல்ஸனிட்ஸின் வெளியிடுகிறார். அவருடைய மிக முக்கியமான கருத்தான "அறவொழுக்க சோசலிசம்" (Ethical Socialism) பேராசிரியர் ஷுலிபின் மூலமாக வெளியிடப்படுகிறது. இதன்மூலம் ஸோல்ஸனிட்ஸினின் தத்துவக் குறைபாடுகள் வெளியாகின்றன. "உற்பத்தி முறையை மாற்றினால் போதும். மக்கள் அதனுடன் தாமாக மாறிவிடுவார்கள் என்று நினைத்தோம். ஆனால் அப்படியா? நாசமாய்ப் போக, அவர்கள் கொஞ்சம்கூட மாறவில்லை" என்று ஸ்டாலின் கோட்பாட்டைச் சரியாகச் சாடும் பேராசிரியர் ஷுலிபின் "மனிதன் ஒரு உயிரியல்ஜீவி (biological being). அவன் மாறுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகள் ஆகும்" என்று கூறுவதன்மூலம் மனிதன் ஒரு சமூக ஜீவி (social being) என்பதை மறுக்கிறார். இது ஒரு எல்லையிலிருந்து மறு எல்லைக்குத் தாவும் கோமாளித்தனமே. மனிதனை மறுவார்ப்புச் செய்தெடுப்பதற்கு (remoulding) வேண்டிய ஒரு மகத்தான கலாச்சாரப் புரட்சியின் தேவையை, ஸ்டாலினுடன் ஷுலிபினும் உணர மறுக்கிறார். மனிதன் மாறுவதற்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகள் பிடிக்கும் என்கிற ஷுலிபின் தனது "எதிகல் சோசலிசம்" எத்தனை ஆண்டுகளில் அவனை மாற்றக்கூடியது என்று கூறியிருந்தால் நன்றாக இருக்கும்!

"சோசலிசத்தைப் பௌதீகப் பொருட்களின் பெருக்கத்தின் அடிப்படையில் கட்ட முடியாது. ஏனெனில் சில சமயங்களில்

மக்கள் எருமைகள் போல நடந்து கொள்வார்கள். அவற்றை மிதித்துத் துவைத்து விடுவார்கள். வெறுப்பினால் மட்டுமே சோசலிசம் வராது. ஏனெனில் வெறுப்பின் அடிப்படையில் சோசலிசத்தைக் கட்டமுடியாது'' என்கிறார் ஷுலிபின். பௌதீகப் பொருட்களின் பெருக்கம் மட்டுமே சோசலிசம் அல்ல. இது உண்மையானால் அமெரிக்கா போன்ற ஏகாதிபத்தியங்கள் கூடத் தம்மை சோசலிசநாடு என்று கூறிக் கொள்ளமுடியும். தவிர, பௌதீகப்பொருள்களின் பெருக்கம் மனிதத் தேவைகளை முற்றாக நிறைவேற்றாது. சீனா போன்ற நாடுகள் சோசலிசம் என்று கூறுவதைக்கூட நாம் மறுக்க வேண்டிவரும். ஆகவே பொருளின் உற்பத்தி கொண்டு வரையறுக்கப்படுவது அன்று. சோசலிசம் அப்படி வரையறுக்கப்படுமேயானால் அது குருஷ்சேவ் கூறிய ''மாட்டிறைச்சி— உருளைக்கிழங்கு'' சோசலிசமாகத்தான் (Goulash Socialism) இருக்கும். ஆனால் சோசலிசம் கட்ட, ஆரோக்கியமான பொருளாதார அடிப்படை வேண்டும். சுரண்டும் வர்க்கத்தின் மீது வெறுப்பை உமிழாமல், பாட்டாளி வர்க்கத்திடம் அன்பைக் காட்டாமல், சோசலிசத்தைக் கட்டவும் முடியாது. இக்காரணங்கருதியே ஸ்டாலினும் ஷுலிபினும் ஒரே நாணயத்தின் இருபக்கங்களாகின்றனர்.

காலம், இடம், வர்க்கங்கள் இவைகளைப் பொருட்படுத்தாது, தியானத்தில் மூழ்கி, ஒழுக்கரீதியான சோசலிசம் பற்றிக் கூறுகிறார் சோல்ஸனிட்ஸின். ''அறவொழுக்கங்களிலிருந்து மட்டுமே ஊற்றெடுக்கும் உறவுகள், அடிப்படைக் கோட்பாடுகள், சட்டங்கள் ஆகியவற்றைக் கட்ட விரும்பும்'' சோல்ஸனிட்ஸின் கற்பனா சோசலிச வாதிகளான ஃபூரியர், செயிண்ட் சைமன் ஆகியோரோடு ஸொலோவீவ் க்ரோபோட்கின், மிகலாய்ஸ்கி, தஸ்தாவோஸ்கி, டால்ஸ்டாய் ஆகியோரிடமிருந்தும் ஊக்கம் பெறுகிறார். 'எதிகல் சோசலிசத்தின் முன்னோடிகள், மனிதனின் உணர்வுநிலையை உயர்த்தினால் போதும், அவனுக்கு விழிப்புணர்வு தந்தால் போதும், தமது அறக்கோட்பாடுகளைப் பரப்பும் ஒரு அரசாங்க வடிவத்தை உருவாக்கினால் போதும், ஒரு சமத்துவம் நிறைந்த நியாயமான சமுதாயம் உருவாகும் என்று நினைத்தார்கள். மார்க்சியமோ, ஒரு தேசத்தின் அறவொழுக்கத்தை நிர்ணயிப்பது அதன் பொருளாதார, சமுதாய அமைப்புகளே என்றும், அவ்வறவொழுக்கமே ஒரு வரலாற்றுப் படைப்பு என்றும் நிரூபித்துள்ளது. பொருளாதார, சமுதாய அமைப்புகளின் மீது அறவொழுக்கங்கள் எதிர்விளைவு செய்வதையும் மார்க்சியம் ஏற்கிறது. ஆனால் இவற்றில் முதன்மையான பாத்திரத்தை வகிப்பது பொருளியல் உறவுகள். வெற்று உபதேசத்தால் பொருளியல் நிலைகள் மாறவே மாறா என்பதில் மார்க்சியம் உறுதியாக நிற்கிறது. இத்தகைய வர்க்கச் சமரச வகையான அற உபதேசம், சமுதாயப் போராட்டத்தைக் கைவிடவே செய்யும். இம்மானுவேல் காண்டின் அறத்தத்துவத்தையும், விஞ்ஞான சோசலிசக் கோட்பாட்டையும் இணைத்த புதிய காண்டியவாதிகள் சமுதாய உறவுகளிலுள்ள முரண்பாடுகளைத் தீர்க்கும் விஞ்ஞானமே அறவொழுக்கங்கள் என்று கருதினர். வர்க்கங்கள், வர்க்கப் போராட்டங்கள், சமுதாயப் புரட்சி, அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றுதல் ஆகிய பிரச்சினைகளை நிராகரித்து, மனிதனின் தார்மீக உறவுகள், மனிதனின் தார்மீகப் புனருத்தாரணம் ஆகியவற்றில் கவனம் செலுத்தினர்கள். சாராம்சத்தில் சோசலிசத்துக்கான போராட்டத்தைக் கைவிடச்செய்யும் தத்துவமே எதிகல் சோசலிசம். அமெரிக்காவில் உற்பத்தியாகிய M. R. A. (Moral Rearmament Association) கூட எதிகல் சோசலிசம் பேசுகிறது!.......

You sometimes went farther than you wanted to, out of sheer fury என்கிற ஒலக்கின் வார்த்தைகள் சோல்ஸனிட்ஸினைத் தான் குறிக்கின்றன என்று சொன்னோம். இதற்குமேல் ஸோல்ஸனிட்ஸினைக் குற்றப்படுத்துதல் நியாயமா? ●

---

## கண்ணாடி முன் கடவுளையும் சேர்த்து ஒரு புகார்

என் மனம் என் முகம் நக்க
கன்றின் குறியை தாய் நாக்குப் போல்
நக்கி அடிமடி எக்களித்து சுகம் காண
கிளுகிளுப்பு கால் இழுக்க
எத்தனை தரம் உன் முன் நகர்த்தப்பட்டேன்?

இப்பொழுது அதற்கு அல்ல.

உலர்ந்த என் முகம் வெளிப்படும் சலிப்பில்
ஸ்புரித்தது 'இருக்குமே உனக்கும் ஒரு முகம்'
எங்கே அது?
என் பிம்பத்தின் பின்னிலா?
நான் இன்றி உன்னைக் காண ஒரு ஆசை
உன் முகம் காண விழையும் என் முகமே
உன் முகம் மறைக்கும் விசித்திரக் கொடுமை.

நீதான் பளிங்கு எனில்
மரமும் கடலும் குருவிகளும் நக்ஷத்திரங்களும்
வால் துடிக்கக் கத்தும் அணிலும், புணர்ச்சியும்
கணக்கும் கருத்தும் தமுக்கின் ஓசையும்
என் முன் என் முகம் கக்குவது ஏன்?

என்று ஆடை உரித்து அம்மணம் பற்றும்
என் பார்வை?

பசுவய்யா

# புதிய கதையை...

மு. திருஞானம்

ஊரே அடங்கிக் கொண்டிருந்த அந்த இரவு நேரத்தில் அவன் மட்டும் படுத்தவாறே கொட்டக்கொட்ட விழித்திருந்தான். அறையில் டிரான்ஸ்பார்மர் பொருந்திய டும்லைட்டின் மங்கிய ஒளி வியாபித்திருந்தது. கீழே தரையில் பாய்விரித்து அதன்மீது பவானியிலிருந்து சென்ற வருடம் அவனது மாமா வாங்கிவந்திருந்த சமுக்காளத்தை விரித்துப் படுத்திருந்தான் அவன். அதே பாயில் அவனது இடது கைப்பக்கமாகப் பூனைபோன்று சுருட்டி மடக்கிப் படுத்துத் தூக்கத்தில் ஆழ்ந்துபோயிருந்தாள் அவன் மனைவி. தலையணை இருந்தும் தன் இரு கைகளைத் தலையணையாக வைத்திருந்தாள் அவள். முகத்தில் ஆழ்ந்த தூக்கம். கட்டியிருந்த உள் பாவாடை வெளியே தெரிய அதன் மேலே உடுத்தியிருந்த சேலை சற்று சரிந்து சுருங்கியிருக்க, தன் கணவன் விழித்திருக்கிறானே என்ற கவலையோ, எண்ணமோ சிறிதுகூட இல்லாமல் தூங்கிக் கொண்டிருந்தாள் அவள். அவளையும்தான் குற்றம் எப்படிச் சொல்ல முடியும்? விடிகாலையில் ஐந்து மணிக்கே விழிக்கிறாள் தினமும். பிறகு அடுத்தடுத்துத் தொடர்ந்தாற்போன்று பல வேலைகள். இரவில் படுக்கைக்கு அவள் வரும்வரை வேலைகள் ஓயா. அவ்வாறு பகலெல்லாம் சுழன்று சுழன்று வேலைசெய்கிற களைப்பு, இப்படி அடித்துப் போட்டதுபோல் தூங்குகிறாள். செய்தால் வேலை செய்து கொண்டிருப்பாள். தூங்க ஆரம்பித்துவிட்டாலோ அதிகாலை ஐந்து மணிக்குத்தான் விழிப்பாள். இடையில் அவளுடைய காதுக்குள்ளே டமாரம் வைத்து அடித்தாலும் கொஞ்சம்கூட அசைந்து கொடுக்கமாட்டாள்.

மனைவியிடமிருந்து பார்வையை எடுத்துவிட்டு, மீண்டும் யோசனையில் ஆழ்ந்தான் அவன். அவனுடைய வலதுகைச் சுட்டுவிரல் ஏதோ படம்வரைவதுபோன்று அவ்வப்போது சூனிய வெளியில் அங்குமிங்கும் கோடுகளைப் போட்டுக்கொண்டிருந்தது. அவனுடைய உதடுகள் துடித்துக்கொண்டிருந்தனவே தவிர, கேட்கும்படியாக எதுவும் சொல்லவில்லை.

'என்னடா இது பெரிய ரோதனையாப் போச்சு!' என்று அவன் மெல்லிய குரலில் இப்போது முணங்கிக்கொண்டான். 'அவனவன் எப்பிடியெப்பிடியோ ஐடியாக்கள ஃபார்ம் பண்ணி, கதைகள எழுதித் தள்றானுக. நானும் அப்பவே புடிச்சு யோசிச்சுக்கிட்டே இருக்கேன்—ஒரு பிடியும் ஆப்புடலியே? இதுக்கு முந்தில்லாம் நாம கதைகள எழுதலியா? இப்பமட்டும் ஏன் ஐடியா வர்றத்துக்குத் தகராறாகுது? நம்ம மூளை வறண்டு போச்சா?'

அவன் பார்வை, மங்கிய வெளிச்சம் நிறைந்த அந்த அறையைச் சுழன்று வந்தது. அறையின் ஒரு மூலையில் டேபிளும், சேரும் இருந்தன. 'ஒரு மாசம் இருக்குமா நாம கடேசியாக் கதெ எழுதி? இருக்தும், இருக்கும். அதுக்கும் மேலகூட இருக்கும். இருக்கட்டும். அதுசரி... நாம ஏன் இப்போல்லாம் இப்படிச் சோம்பேறியாய்ட்டோம்? நாம எழுதாம இருக்குறதுல மட்டும் கொறச்சலில்ல—பின்ன ஏன் அவனை இவனைப் பாத்துப் பொறாமப்படணும்? என்னமோ சொல்லுவாங்களே, அடுத்த வூட்டுக்காரி ஆம்புள்ளைப் புள்ளை பெத்தாளாம், எதுத்த வீட்டுக்காரி இடிச்சுக்கிட்டுச் செத்தாளாம்னாப்புல.'

கொசு ஒன்று அவனுடைய காலிலிருந்து தனக்குத் தேவையான ரத்தத்தை உறிஞ்ச ஆரம்பித்தது. 'சை! சனியன்' என்று இவன் கடுப்பாகத் திட்டினான்... 'மூட்டப்பூச்சிச் சனியன் இல்லேன்னு இருந்தோம். இந்தக் கொசுப் பெசாசுங்க ஒழிஞ்சு தொலையமாட்டேங்குதுங்களே! உயிரேல்ல போகுது? சே! சே! சே! 'வா, வா'ங்குற ஐடியா வரமாட்டேங்குது. வரவேண்டாங்குற கொசு வந்துருது..' கடிபட்ட காலை மற்றொரு காலால் தேய்த்துக் கொண்டான். ஏற்கனவே அவன் வாங்கி வைத்திருந்த கொசுவலையை ஒருநாள் கவனக்குறைவாக வெளியே வைத்திருக்க, எலி கடித்துக் குதறிவிட்டது. அத்தோடு அந்த வலையை மூட்டைகட்டி வைத்துவிட்டான். அடுத்த வலை வாங்கவேண்டும். ஆயினும் இப்போது கொசுக்களிடமிருந்து தப்பிக்கும் வழி என்ன என்று யோசித்தான். பெட்டியிலிருந்த போர்வையின் நினைவு அவனுக்கு வந்தது. எழுந்து, பெட்டியைத் திறந்து அதை எடுக்க அவனுக்குச் சோம்பேறித்தனமாக இருந்தது. ஆயிரம் கொசுக்கள் கடித்தாலும் புரண்டு புரண்டு படுத்துக்கொண்டு தூக்கம் சிறிதும் கலையாமல் கிடந்த தன் மனைவியைப் பார்த்தான். இவளை எழுப்பிப் போர்வையை எடுக்கச் சொன்னால் என்ன என்று நினைத்தான். மறுகணம் அவனுக்குச் சிரிப்பு வந்தது. இவளை எழுப்புவதற்குள் விடிந்து

விடும். 'நாமே போயி எடுத்துக்குற வேண்டியதுதான்.'

எழுந்தான். பெட்டியைத் திறந்தான். துணிக் குவியல்களைப் புரட்டி, எல்லாவற்றிற்கும் அடியில் வைக்கப்பட்டிருந்த போர்வையை எடுத்தான். மறுபடி பாயில் வந்து நின்றான். தனக்கு இணையாக இருக்கும்படி போர்வையைப் பிரித்தான். அதைத் தன் உயரத்துக்கு வைத்துக்கொண்டான். அப்படியே மெதுவாகப் படுத்தான். அவனைப் போர்வை சூழ்ந்தது. முகம் மட்டும் வெளியே தெரியும்படியாக விட்டுவிட்டு, மற்றப் பகுதிகளையெல்லாம் போர்வையால் நன்கு மூடிக்கொண்டான். கொசுக்களின் தொல்லை சற்றுக் குறைந்ததாக அவனுக்குப் பட்டது. எனவே மீண்டும் கதைக்கான தீம் பற்றி யோசனையிட ஆரம்பித்தான்.

'இப்பல்லாம் நானும் ஒரு பெரிய எழுத்தாளன், அப்பிடி இப்பிடின்னு சொல்லிக்கிட்டு, இலக்கியக் கதெ எழுதுறதா பேர்பண்ணிக்கிட்டு ஒண்ணுமே புரியாதபடிக்கு பலபேரு கதெக எழுதுறாங்க.... அவங்களையே ஏன் நாமும் ஃபாலோ பண்ணக்கூடாது? ஏன் நாமளும்தான் என்ன, சின்ன எழுத்தாளனா? எத்தனை கதெக எழுதியிருக்கோம்? ம்...சும்மாவா? சரி, இப்ப நாமயோசிக்குற கதெக்குக் கதாநாயகனுக்குப் பேரு கெடயாது. 'அவன்' 'அவன்'னே குறிப்பிடணும்; கதாநாயகி? அப்படின்னு ஒருவேளை நம்ம கதெயிலே ஒருத்தி வந்தாள்னா, அவளை 'அவள்' 'இவள்'னே குறிப்பிடணும். மத்தவங்க எழுதுற கதெகளோட கதாநாயகன், நாயகிக்கு நம்ம கதாநாயகன், நாயகினுப்புல கொறஞ்சவங்களா?'

எங்கேயோ பாத்திரங்கள் ஒன்றோடொன்று இடித்துக் கொண்டு உருளும் சத்தம் கேட்டது. கூர்ந்துகேட்டான். அடுத்த அறையில்தான். 'ஏதாவது பூனைச் சனியனுத்தான் இருக்கும். எலியோட ரெத்தம் வெள்ளைன்னு நெனப்பு அதுக்கு பால் வாங்கிப் பத்திரம் பண்ணுறதுக்கு இந்த வூட்டுல துப்பு இருக்கா? பூனையும், எலியும், கொசுக்களும்... அப்பப்பா! நல்ல வீடா கெடச்சுச்சுடா வாடகைக்கு. வூட்டெக்கெட்டிவச்சான் பாரு, மவராசன், அவனெச் சொல்லணும்..' திட்டியவாறே படுக்கையறைக் கதவைத் திறந்து, அடுத்துள்ள சமையலறைக்குள் புகுந்தான். ஸ்விட்சைத் தட்டி லைட்டை எரியவிட்டான். அந்த வெண்மையான வெளிச்சத்தில் கருமையான பூனை ஒன்று பாய்ந்து ஜன்னல்வழியே இருட்டில் கலந்தது. மறுபடி படுக்கைககுத் திரும்பினான் அவன். 'ஒரு கதெய யோசிக்கிறதுக்குள்ளே எத்தனை முட்டுக்கட்டைன்னு பாரு. ஆகக்கூடி நேரம் கழிஞ்சதுதான் மிச்சம். இன்னம் ஒரு கதெகூட யோசிச்ச பாடில்ல. பகல்லேதான் சந்தடி அதிகமுள்ள நேரம், தெளிவா யோசிக்கமுடியல்ல, ஆபீசு வேலைக வேற. யோசிச்சா. இப்பத்தான் யோசிச்சபடி, அமைதியா, கொழப்பமில்லாம ஒரு கதெயெ பார்ம் பண்ணலாம்னு நெனச்சாக்க...' என்று முணங்கியவாறே மீண்டும் படுத்துக் கொண்டான்.

இந்தத் தடவை தன் முகம்கூடத் தெரியாதபடி போர்வையால் தன்னை மூடிக்கொண்டான். போர்வைக்குள்ளே விழித்திருந்தான். 'வண்டியிலே பூட்டுற குதிரையும், கதெ யோசிக்கிறவனும் ஒண்ணு. குதிரைக்கிக் கண் தடுப்பு போட்டாத்தான் அங்கிட்டும் இங்கிட்டும் வேடிக்கை பாக்காதபடி, போற திக்கிலேயே கவனமாவும், குறியாவும் போவும். அதப்போலத்தான் நாமளும் இந்தமாதிரி போர்வையால மொகத்தை மூடிக்கிட்டாத்தான், பார்வை நாலாபக்கமும் போகாது... மனசுல நெனைக்கிற கதைக் காட்சியெ இந்தப் போர்வைக்குள்ளே பாக்கமுடியும்.'

சாக்கு மூட்டைக்குள் ஏதோ பார்சல் கட்டியிருந்தது போலிருந்தது அவன் படுத்துக் கிடந்த தோற்றம். கால் எந்தப் பக்கம் இருக்கிறது, தலை எந்தப்பக்கம் இருக்கிறது என்று எளிதில் தெரிந்துகொள்ள முடியாதபடி போர்வையின் ஆக்கிரமிப்பு. போர்வைக்குள் இருந்துகொண்டு மீண்டும் அவன் கதை யோசிக்கலானான். அவனது கை போர்வைக்குள்ளேயே படம் வரைந்தது. வெளியே உள்ள மங்கிய வெளிச்சம் போர்வை வழியே ஊடுருவி, உயிரில்லாத வெளிச்சமாக மாறி அவன்மீது பட்டுக்கொண்டிருந்தது.

அவன் எண்ணம் கைக்கூடியது. கரு ஒன்று பட்டும் படாமலும் அவனுக்குப் பிடிபட்டுவிட்டது. போர்வைக்குள் இருந்த அந்த வெளிச்சம் அவனுக்கு இதில் ரொம்ப உதவியது. தான் மட்டும் தன்னந்தனியாக, மற்ற ஜீவராசிகள் எதுவுமில்லாத ஓரிடத்தில் இருப்பது போன்ற பிரமையில், எவ்விதத் தொந்தரவுமில்லாமல் யோசனையில் பட்டும்படாமலும் உதித்த அந்தக் கருவுக்குப் பாத்திரங்கள் சம்பவங்கள் இவைகளைக் கூட்ட முனைந்தான்.

திடீரென்று முன்பு இருந்த வெளிச்சம் கூட போர்வையில் இல்லாமல் ஒரே கறுப்புத் தெரிந்தது. திகைத்துப்போய், முகத்தை மூடியிருந்த போர்வையை எடுத்து டியூப்லைட் இருந்த திசையைப் பார்த்தான். மின்சாரம் தடைப்பட்டு அந்த டியூப்லைட் அணைந்திருந்தது. 'எது எப்படியானா என்ன? நமக்குக் கரு கெடச்சுருச்சு. மத்த சங்கதிகள யோசிக்கணும். அதான் நமக்குக் குறி. இப்பிடி இருட்டா இருக்குறதும் நமக்கு ஒரு வெதத்துல நல்லதுதான். அந்த 'தாஜாசு'ல்லாம் இருட்டுலதான் நல்ல நல்ல கதெகளையெல்லாம் தன்னால் யோசிக்க முடியுதுன்னு சொல்லியிருக்கார் போனமாசம் வெளியான அவரோட பேட்டியிலே!' இந்த நினைப்பு வந்ததும் இவன் தன் கரு—நினைவின் வேகத்தைத் தீவிரமாக்கிக் கொண்டான். தனக்குத் தோன்றியுள்ள கரு

ரொம்பப் பழைய கருவாக அவனுக்குப் பட்டது. மேலும், இதே கருவை வைத்து ரொம்பப்பேர் முன்னமேயே நிறைய எழுதிவிட்டார்கள் போலவும் அவனுக்குத் தோன்றியது. எனவே அதைச் சற்று ஒதுக்கிவைத்துவிட்டு, வேறு ஒரு புதிய கருவை யோசிக்கத் திட்டமிட்டான். அப்படி எந்தப் புதிய கருவும் கிடைக்காவிட்டால் ரொம்பப்பேர் எழுதியுள்ள கருவாயிருந்தாலும் பரவாயில்லை அதையே எழுதிவிடலாம் என்றும் தீர்மானித்துக் கொண்டான். இன்றிரவு முழுதும் தூங்காமல் விழித்து யோசித்துக் கொண்டிருப்பதற்கு எப்படியாவது ஒரு கதையை உருவகம் செய்து விடவேண்டும்!

அப்போது வேறொன்று அவன் நினைவுக்கு வந்தது. சிரித்துக் கொண்டான். 'இந்த இருட்டுலபோயி கண்ணைத்தெறந்துகிட்டு இருந்தாத்தான் என்ன, கண்ணை மூடிக்கிட்டு இருந்தாத்தான் என்ன? ரெண்டும் ஒண்ணுதானே!' இந்த நினைவுக்குப் பின்னர் இதுவரை கண்களைத் திறந்து கொண்டிருந்தவன் இப்போது கண்களை மூடிக்கொண்டு போர்வைக்குள்ளிருந்தவாறே கருவைத் தேடினான். மேலும் ஒன்றிரண்டு கருக்கள் தோன்றின. அவனுக்கே ஆச்சரியம்! 'அட, இதென்னடா மந்திரமா! உண்மையிலேயே இருட்டுக்குள்ள கண்களை மூடிக்கிட்டு யோசிச்சா, என்ன வேகமா ஐடியால்லாம் வருது!' என்று சொல்லிக்கொண்டான். மண்டையில் எதுவோ இடித்தது போன்று, திடீரென்று அவனுக்கு அணைந்திருந்த டும்லைட்டின்ஞாபகம் வந்தது. 'மின்சாரம் மறுபடி வந்து லைட்டு எரிய ஆரம்பிச்சிருமோ? கூடாதே—யோசனை ஓடாதே! லைட்டை அமத்திவிடுறதுதான் நல்லது!' என்றவாறு எழுந்து தடுமாறி தடுமாறி ஸ்விட்சை நெருங்கி ஆஃப் செய்தான், மறுபடியும் தடுமாறித் தடுமாறிப் படுக்கையில் சரிந்தான். போர்வையிட்டுக் கொண்டான். கண்களை மூடிக்கொண்டு, இதுவரை தனக்குத் தோன்றியவைகளில் நவீனமானதும், எழுதுவதற்குத் தகுந்ததுமான ஒரு கருவை ஆராய்ந்தான். இருட்டில் கண்களை மூடிக்கொண்டு இவ்வாறு தேடுகையில் எவ்வளவு விரைவாகவும் தெளிவாகவும், பிற இடர்ப்பாடுகள் எதுவுமின்றி ஐடியா கிடைத்துவிடுகிறது என்பதை மீண்டும் எண்ணி, தனக்குக் குருட்டாம் போக்கில் தோன்றித் தன்னிடம் அகப்பட்டுவிட்ட இந்த யுக்திக்காகத் தன்னையே ஒருமுறை 'சபாஷ்டா!' சொல்லிக் கொண்டான். இனி புதிய கதைகள் எழுதப் போகும் ஒவ்வொரு தடவையும், கருவைத் தேடுவதற்கு இம்முறையையே பின்பற்றுவது என்றும் திட்டவட்டமாகத் தீர்மானித்துக் கொண்டான்.

எங்கோ மணி என்னவோ அடித்தது. அது அவன் காதுக்கும் கேட்டது. அதைப் பற்றி அவன் கவலைப்படவில்லை. கண்களை இதமாக மூடியபடியே 'நடுச்சாமம் ஆகியிருக்குமோ? சரி...என்ன மணியானால்தான் என்ன? அதெயெல்லாம் பாத்தா முடியுமா?' என்று முணகினான். கருவைத் தேர்ந்தெடுப்பதில் இன்னும் தீவிரமாக முனைந்தான். புரண்டு புரண்டு படுத்தான். இதுவும் ஒரு வகைப் பிரசவம்தானே? வேதனையும் துடிப்பும் அலுப்பும் இருக்காதா என்ன? கொட்டாவி வந்தது. அதைப்பற்றியெல்லாம் அவன் கவலைப்படுவதாவது? எத்தனையோ கொட்டாவிகள் வந்து பயனற்றுப் போயின. அதே போல்தான் இதுவும். 'நூத்தோடு ஒண்ணு நூத்தியொண்ணு!'

'கொட்டாவி வருது, ராத்திரி ரொம்ப நேரம் ஆயிருச்சு, அதுஇதுன்னெல்லாம் பேசக் கூடாது. இதெல்லாத்தையும் பாத்துட்டிருந்தோம்னா, பேர் வாங்குற ஆசெயெ மறந்துற வேண்டியதுதான். மத்தவன்லாம் இப்பிடி எழுதுறானே, அப்பிடி எழுதுறானே, அவனுக்குப் பாராட்டுவிழா நடத்துறாங்களே, இவனோட கதெகளை சிறந்ததாச் சொல்றாங்களே அப்படீன்னு பிலாக்கணம் பாடிக்கிட்டேயிருக்க வேண்டியதுதான்... இங்கதான் நமக்கும் கருகெடச்சுருச்சு. இனி இத தூசி தொடச்சு, பிசுறு நீக்கி, நல்லா க்ளீன் செஞ்சு, கண் காது மூக்கு வச்சுட்டோம்னா—' கற்பனையில் ஆழ்ந்தான். மூடிய அவனுடைய கண்கள் வழியே பல கதாபாத்திரங்கள், பல நிகழ்ச்சிகளையும் தங்கள் கூடவே கூட்டிக் கொண்டு அவன் நெஞ்சில் தொங்கவிடப்பட்டிருந்த ஸ்கிரீனில் காட்சியளித்தார்கள். ஒவ்வொரு பாத்திரமாக ஒவ்வொரு நிகழ்ச்சியாக அவன் இவ்வாறு யோசித்தான், யோசித்துக் கொண்டேயிருந்தான். கடைசியாக 'ஒண்ணுமே சரியா அமையலியே—திருப்திப் படலியே...ம்.. சரி இதுவரை யோசிச்சதுலயே வேறொரு கருவை எடுத்துக்கிட்டு அதுக்குத் தக்கபடி நகாசுவேலை செய்யவேண்டியதுதான்...? எண்ணங்களை கான்சென்ட்ரேட் செய்து, மூடியகண்களின் வழியே நெஞ்சத் திரையில் காட்சிகள் பார்க்க ஆரம்பித்தான்.

'என்னங்க! இப்படித் தூங்கிக்கிட்டிருக்கீங்களே? ஆபீசுக்குப் போகவேண்டாமா?' என்ற பலத்த குரல்கேட்டு, தூக்கத்திலிருந்து விழித்தான் அவன். உயரே இருந்த ஜன்னல் வழியே சூரியனின் கிரணங்கள் சுள்ளாப்பாக அறையில் விழுந்துகொண்டிருந்தன. மனைவி திரும்பவும் சமையல்கட்டுக்குச் சென்று விட்டாள். சற்று நேரம் மலங்க மலங்க விழித்துவிட்டு 'சே! சனியன் புடிச்ச தூக்கம்! எப்படித் தூங்குனோம், எப்பத் தூங்குனோம்னு தெரியவேயில்லியே ..ம்...எப்பத் தூங்கித் தொலைச்சேன்?' என்று முணகினான் அவன். பின்பு, 'சரி. கருவைத் தேர்ந்தெடுக்குறது பத்தியும், பிற்பாடு அதெகதெயாப் பண்றதுபத்தியும் இன்னொரு நா யோசிக்க வேண்டியதுதான்' என்று சொல்லியவாறே எரியும் கண்களைத் தேய்த்தவாறு தோட்டத்துப் பக்கம் சென்றான் அவன். ●

# சண்டையும் சமாதானமும்*

உயர்தரமான பல கதைகள் அடங்கிய இத்தொகுப்புக்கு கரடுமுரடான, படிக்க முடியாத ஒரு முன்னுரையை அளித்திருக்கிறார் நீல. பத்மநாபன். ஆனால் இந்த முன்னுரை முக்கியமானது. தன் எழுத்தின் நோக்கத்தைப் பற்றி அதில் விரிவாகத் தெரிவித்திருக்கிறார். கதையைத் தேடிக்கொண்டு அவர் போவதில்லை. ஆனால் அவ்வப்பொழுது ஒரு கதையின் அடிப்படையான கரு அவருக்குக் கண்ணில் தென்படுகிறது, அல்லது காதில் விழுகிறது. கதைமூலம் அதைத் தெரிவிக்கும்வரை அவருக்கு நிம்மதி கிடையாது. வீணில் கதையை இழுத்தடிப்பதற்காக என்றோ நீட்டியோ குறைத்தோ எழுதுவது அவர் பழக்கமில்லை. கதை தெளிவாக, நிறைவுடன் அமைய வேண்டுவதற்குப் போதுமான சம்பவங்களையும் விவரணைகளையும் மட்டுமே வைத்து, தன்னிடமுள்ள கலைத்திறன் முழுவதையும் உபயோகித்து எழுத முயற்சிக்கிறார். தான் எழுதுவது எல்லாவற்றிலும், 'நாம் செய்யும் காரியங்களை ஏன் செய்கின்றோம்; எந்தக் காரணத்தினால் இப்படிச் செய்தோம்?' என்ற கேள்விகளுக்குப் பதில் தேடுகிறார். இந்தப் பதில்களைத் தற்காலத்தில் பரவியிருக்கும் மனோதத்துவக் கொள்கைகள் மூலமாகக் கண்டுபிடிக்கப் பார்க்கிறார்.

இது நீல. பத்மநாபனின் நோக்கம். இத்தொகுப்பிலுள்ள கதைகளைப் படித்த பின்னர் இந்த நோக்கத்தில் அவர் அனேகமாக வெற்றி பெற்றிருக்கிறார் என்றே நமக்குத் தோன்றுகிறது.

கதைகளில் மகிழ்ச்சி என்பது மருந்துக்குக்கூட கிடையாது. வேண்டுமென்றால் "கள்" என்ற கதையில் ஒருவிதமான நகைச்சுவையைச் சிலர் காணலாம். பொதுவில், இந்தக் கதைகள் அவமானம், பொறாமை, பலவிதமான மனச் சோர்வுகள்—ஆனால் இது தான் வாழ்க்கை என்று விரக்தியுடன் ஒத்துக்கொள்ளும் இயல்பு, இவைகளைப் பற்றியே எழுதப்பட்டிருக்கின்றன.

இங்குள்ள பதினொரு கதைகளில் இரண்டு மூன்று மிகச் சிறப்புடன் விளங்குகின்றன. தலைப்புக் கதையின் கலைத்திறனை எளிதில் விவரிக்க முடியாது. தன் மூத்த மகன் தன்னுடைய கஷ்டங்களையெல்லாம் தீர்த்து வைப்பான் என்று திடமாக நம்பும் தாய், தன் மனைவியால் ஆளப்படும் இளையமகன், தம்பியின் மனைவியின் அதே பெண்மைச் செழுமையால் வெல்லப்பட்ட மூத்த மகன்—இவர்கள் எல்லோரும் உண்மையான ஜீவிகள். பின்பு என்ன நடக்கப்போகிறது என்பதை முதலிலிருந்தே சொல்லியும் சொல்லாமலும் காட்டுவது இந்தக் கதையின் அரிய சாதனை. டால்ஸ்டாயின் நாவலின் தலைப்பை நீல. பத்மநாபன் கொஞ்சங்கூட பயமில்லாமல் இந்தக் கதைக்குக் கொடுத்திருக்கிறார். கிராய்ட்ஸர் ஸொனாட்டாவை எழுதிய டால்ஸ்டாய் இந்தக் கதையை ரசித்திருப்பாரென்பதில் சந்தேகமில்லை.

சிறப்பான இன்னொரு கதை 'அரிசி'. கள்ளக் கடத்தலைப் பற்றிய இந்தக் கதை அந்தச் சூழ்நிலையை மிகத்திறமையுடன் விவரிக்கிறது. இந்தக் கள்ளக் கடத்தலில் இனிமேல் பங்கு கொள்ளப் போவதில்லை என்ற நிச்சயமான முடிவுக்கு வரும் கதாபாத்திரம் அடுத்த இரவே கடமை உணர்ச்சியால் இயக்கப்பட்டு அதே செயலில் மறுமடியும் ஈடுபடுவது வாழ்க்கையின் தவிர்க்க முடியாத தன்மையை நமக்கு எடுத்துக்காட்டி நம்மைச் சிலிர்க்க வைக்கிறது.

கவனத்துக்குரிய மற்றக் கதைகள் 'வைகறை', 'விரக்தி', 'கதையில்லை' ஆவன. இவற்றுள் 'விரக்தி' நீல. பத்மநாபனின் ரசிகர்களுக்கு பள்ளிகொண்டபுரத்தை நினைவூட்டும். தொகுப்பிலுள்ள மற்றக்கதைகள் என்னை அவ்வளவாகக் கவரவில்லை. 'மகரவிளக்கு,' 'திரிபுவனபுரம்' முதலியவை நன்றாக எழுதப்பட்டிருந்த போதிலும் பழக்கப்பட்ட, சாதாரணக் கருத்துக்களைப் பற்றியவை.

நீல. பத்மநாபன் கதைகளில் வரும் சம்பாஷணை மிக இயற்கையாக இருக்கிறது. ஆனால் அவர் வர்ணனைகள் சில சமயங்களில் வார்த்தைக் குழப்பங்களாகவே தென்படுகின்றன. இதை அவர் எளிதில் தவிர்க்கலாம்.

எஸ் கிருஷ்ணன்

*சண்டையும் சமாதானமும் (சிறுகதைத் தொகுப்பு)
நீல. பத்மநாபன்
விற்பனை : ஜெயகுமாரி ஸ்டோர்ஸ்
கோர்ட்ரோடு, நாகர்கோவில்-1
விலை : ரூ 4/-

Published by N. Mahaaganapathy. 47, Nallathambi Mudali Street, Madras-5. Printed by M. K. Swamy at Prem Press, 8, M. K. Amman Koil St., Madras-4. Edited by N. Krishnamurthy No. 1, Devadi Street, Madras-4.